உ

திருச்சிற்றம்பலம்.

# ஒழிவிலொடுக்கம்.

சீகாழி.

திருஞானசம்பந்தசுவாமிகள்

திருவருள்பெற்ற

## கண்ணுடையவள்ளல்

திருவாய்மலர்ந்தருளிச்செய்தது.

இஃது

திருப்போரூர்ச்

## சிதம்பரசுவாமிகளால்

அருளிச்செய்த - உரையுடன்.

சிதம்பரம்.

## இராமலிங்கபிள்ளை

யவர்களால்

பார்வையிடப்பட்டு.

மண்ணிப்பாக்கம்.

சபாபதிமுதலியா

ரவர்களால்

முத்தமிழ்விளக்கஅச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிகிருதுஸ்ரீ ஐப்பசிமீ

முதல்பதிப்பு.

1851

உ

# சிறப்புப்பாயிரம்.

வள்ளல்குருராயன்வாதுவென்றசம்பந்தன் ..... ........*
வள்ளன் மலர்த்தாடலைமேல்வைத்துணர்த்தா - னுள்ளத்*
தழிவிலடுக்குந்தேனையன்பரெலாமுண்ண... ............*
வொழிவிலெ டுக்கநூலோர்ந்து.. ............ .. .......*

இச்செய்யுள் கருதிற்றியாதோவெனின், இந்நூன்முகத்தாசிரியர் பெயர் முதலியவற்றைக்குறித்து நிற்றலிற் சிறப்புப்பாயிர வொழுக்க முணர்த்தல் கருதிற்றென்க.

வள்ளல்குருராயன்வாதுவென்றசம்பந்தன் - வள்ளன்மலர்த்தாடலைமேல் வைத்து----எ-து- வள்ளலாரென்னுந் திருப்பெயருடையவர் ஞானாசாரிய நிருபராகிச் சமைய வாதிகடருக்கச் செருக்குகள் பிற்பட்டொழியப்பேரருணெறியான்வெற்றிகொண்டு சீகாழியென்னுந்திருநகர்க்கண்ணேமெய்ந்நெறிவிளங்கவீற்றிருந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையாரது வள்ளற்றன்மையுடைய மலர்போலுந் திருவடிகளைத் தமது நன்முடிக்கண்ணோர் பொன்முடியாகவணிந்து.

ஓர்ந்து - உள்ளத் -தழிவிலடுக்குந்தேனையன்பரெலாமுண்ண-வொழிவிலொடுக்கநூலுணர்த்தான்---எ-து- அத்திருவடிகளினருட்டுணையாற் றத்துவங்களனைத்துஞ் சடமென் றோர்ந்துணர்ந் தவற்றைக்கடந்து தற்காட்சியோடு திருவருட்காட்சியுஞ்செய் தந்நுனம் வாதனையா னசைந்தெழும் போதந்தோற்று தனை யத்திருவருளொளியினடக்கியாண்டு மேன்மேலுமெழாநின்ற சிவானந்தத்தேனைத் தாமநுபவஞ்செய்தவாறதன்கணன்புள்ளபக்குவருஞ் செய்தற்பொருட்டச்சிவானந்தாநுபவவந்தரங்கமெல்லாய் வெளிப்படவிளங்கவொழிவிலொடுக்கமென்றோருபதேசமுறையை யுணர்த்தருளினார் என்றவாறு.

(வள்ளலென்னும்பெயர்.)

ஆசிரியர்க்குத் தாமுன்னிருந்த கிரியாசாரிய நிலைக்கண்ணேவ்வாசாரிய மரபின்வழித்தாய் வந்தகாரண வபிடேகச்சிறப்புப் பெயரொன்க. அல்லதூஉம் பின்னர் ஞானாசாரிய நிலைக்கட் டமதருண்ஞானநோக்கானியைந்த கண்ணுடையவென்னுங் காரண விசேடணமேற்கொண்டுநின்றவிவ்வள்ளலென்னும் பெயரீண்டவ்விசேடண மிசையெச்ச நிலையினிற்ப நின்றதெனினுமமையுமென்க. இஃது வினைபண்பு முதலியவடுத்ததொகைநிலைச்சொ

ற்றொடராகாது தொகாநிலையாய்த் தனைத்தொடர் பயனிலைய
ண்மைப்பொரு ளுணர்ச்சியின்றி யிடையிட்டு நிற்கத்தான்செய்
யுண்முதற்கட்டணித்திருந்தமைபி னாற்றலின்றாமேலோவெனின், அ
ற்றன்று-கொடைமடங்குறித்த குணங்காரணமாகவந்த விவ்வள்
ளலென்னும்பெயர் தன்னுறுப்புகளுட்கொடை- குணம்புகழ ழு
குவளமென்னு நல்வகைகுறித்த பல்பொருட் பகுதியாய வண
மையென்னு முதலுறுப்பா னாசிரியர்க்குளவாயவக்கொடை மு
தலிய வருட்குணங்களைக் குறிப்பிற் புலப்படவிரித்தலிற்பொரு
ளாற்றலுண்டென்க. அல்லதூஉம்- இப்பெயர் உயர்பொருட் கி
டனா யுடனிலைக்கூட்டாய் ஒருநெறியசைத்தா யோரினந்தழுவி
ப்பல்வகைக்குறிப்பிற்படர்ந்து முற்றிலையப்பு வண்ணப் பெருஞ்
சொல்லாக நிற்றலிற் சொல்லாற்றலுமுண்டென்க.

ஆயினிவ்வாசிரியர்பெய ரிச்செய்யுளினிடைகடைகளினொ
ன்றினிறுத்தாது முதலடிமுதற்சீ ரோதுகைத்தொடைக்கணிறுத்
ததிற்குறித்த தியாதோவெனின், ஒன்றிரண்டெனக்கொண்டுறு
மறையாகமநன்றிருமுடியினடுநிலைநடாஅய்ப்புலம்பெறுதத்து
வநியதியிற்போந்துண் மலந்தெறுமறிஞர் வாழ்த்திப்பரவும்ஆ
சிரியர் சன்மார்க்கமுதலிய மார்க்க நான்கனுட்டலைமையிற்றலை
மையாய வுத்தமசன்மார்க்கத்தினையென்பது குறித்ததென்க. இங்
ஙனமுத்தம சன்மார்க்கத்தினையென்பதை யாசிரியர்கூறிய இது
வென்றதெல்லாம் பொய்யென்றானென்னுந் திருவெண்பாவாற்
காண்க — இஃதின்னும் விரிக்கிற் பெருகும்.

குருராயனென்பது-திருஞானசம்பந்தப்பிள்ளையார்க்குச்
சிறப்பிற்சிறப்பாய காரணப்பெயராய்நின்று-ஓதியுணர்ந்துபன்
னாட் பலசாதனங்களின் முயன்றுமுயன்றாசாரியத்தன்மையொ
ருவாறறிதிற்கிடைப்பப்பெற்றுமோரோர்காலங்களி னவத்தைவ
யப்பட்டு மயங்கு மற்றையாசாரியர்போலாதோதாமல்வேதாக
மாதிகளை முற்றுமுணர்ந் திறைப்போது மோர் சாதனங்களின்
முயன்றதின்றி ஞானாசாரியவருளிலக்கணங்க ளனைத்துந்தாமே
தம்பாணிரம்பிநிற்ப வமர்ந்தனரென்பதூஉம் - ஓதியுணர்ந்தவவ்
வாசாரியர்க்கெல்லா மவரவரறிவின்க ணருவுருவாய்நின்றறிவி
த்து மாசாரியவுருவாய் வெளிநின்றனுக்கிரகித்தும் நின்றனரெ
ன்பதூஉம்- திருநோக்கஞ்செய்தன் முதலிய வறுவகைத்திக்கை
யானுமன்றித் தமதுதிருவுருவைக்காண்ட னினைத்தன்மாத்திரை
யேபக்குவரல்லாரும் பக்குவராய்ப் பயன்பெறநின்ற திருவரு
ட்பெருமையரென்பதூஉங்குறித்ததென்றுணர்க.இங்ஙனம்ஓதா

மல் வேதாகமாதி யுணர்ந்தமைமுதலியவற்றையாசிரியர்கூறியத
ன்மையு முன்னிலையுமென்னுந் திருவெண்பாவாற்காண்க.

அல்லதூஉம் -குருராய னென்பது வாதுவென்ற சம்பந்த
னென்பதற்கு மேனிற்கவைத்த விதப்புக்குறிப்பாற் பிள்ளையா
ரிவ்வவதாரத்தின் மேனின்ற வவதாரத்தினுங் குமார சற்குருவா
யரனார்க்கு மகத்தியனார்க்கு முபதேசித்தருளிய வாசாரியத்தலை
மையுங் குறித்தமைதனக்கொள்க. (அருணகிரிநாதர்) தென்னவன
ங்கனஞ்சூழ்காத்திரிநகசூலகரத், தென்னவனங்கனந்தப்பதநீட்
டினன்செல்வமுன்பின், றென்னவனங்கநன்னீற்றுற்றிருத்திய
தென்னவின்னந், தென்னவனங்கனங்கைச்சிலைக்கூலையுநதீர்த்த
குருவே, என்றதனாற் பிள்ளையாரிவ்வவதாரத்திற்கு மேனின்றவவ
தாரத்திற்குமாரசற்குருவென்பதுகாண்க கல்லாடம்- உழன்ம
திற்சுட்டழனகைப்பெருமான் வணங்கிநின்றேத்தக், குருமொ
ழிவைத்தோய் குறுமுநிதேறநெடுமறைவிரித்தோய் (சித்தியார்)
அருமறையாகமமங்கமருங்கலைநூறெரிந்த, வகத்தியனுக்கோ
த்துமாக்குமருட்குருவாங்குருவே, என்பவைகளா லரனார்க்குமக
த்தியனார்க்கு முபதேசித்த வாசாரியத்தலைமையயுணர்க.

ஆயிற்குரு வேந்தனென்னாது குருராயனென்றதெது கு
றித்ததற்கோவெனின் நான்கன் வேற்றுமையானடுத்து மிக்குய
ர்நெறிப் பொருண்மையின் வந்தகாரகச் சிறப் பொருதலைத்
தொடர்மொழிப் பெயராய விக்குருராய னென்பதன்கட் குரு
வென்பதன் முதனிலையெழுத்துத் தமிழியல்விதிப்படி மொழி
க்குமுதலாகியும் ராயனென்பதன் முதனிலையெழுத்துத்தமிழி
யல்விதியின்றி யாரிய வியல்விதிப்படி மொழிக்கு முதலாகியும்
வந்திருவகையிலுங் கோடலி னிதனைத்தம்பெயராகவுடையபி
ள்ளையாருந் தமிழ்நூல் வடநூலென்னு மிருவகைநூற்கு முரி
யாரென்பது குறித்ததற்கென்க. ஆசிரியர் மறைப்புலவன் றமிழ்
க்குரிசில் சீகாழிச்சம்பந்த னென்றதனாலிருவகைநூற்குமுரியா
ரென்பது காண்கவென்க - அல்லதூஉம் - பொருள் வேறுப
டாது சிறிதே வடிவு வேறுபட்டுநின்ற குருராய னென்பதி த
ன்னையுள்ளூன்றி நோக்கினர்க்கிலைமறைகாய்போல் ஜாவென்
னுமுயிர் மெய்யோடிருந்த தன்முன் வடிவமுட்கொண்டு விள
ங்கக்காட்டி நிற்கின்றதாகவி னிதனையுடைய பிள்ளையாருந்தமது
கடவுட்டன்மை வேறுபடாதுத் தமபுருட வுருவங்கொண்டுநின்
றதம்மை யன்பானுள்ளூன்றி நோக்கினார்க்குக் குமார சற்குரு

வென்னும் பெயர்கொண்டளவிகந்த சூரியருதயம்போன் றொ
ளிவிளக்கம் முன்னுருவாய தெய்வத்திருவுருவுட்கொண்டு விள
ங்கக்காட்டி நின்றனரென்று குறித்தற்கென்பதுமாமென்க.

(ஆளுடைய பிள்ளையார்புராணம்) மறையவர்திருவே வை
திகநிலையேவளர்ஞானப், பொறையணிமுகிலே புகலியர்புகலே
பொருபொன்னித், துறைபெறுமணியேசுருதியினொளியேவெ
ளியேவந், திறையவனுமையாளுடனருடரவுண்டனையென்பார்.

என்று மூவாண்டிற்பிள்ளையார் திருவருள்வடிவைக்கண்டு
சீகாழியுள்ளார் வியந்துகூறியவாறாயவிச்செய்யுளால் உள்ளு
ன்றி நோக்கினர்க்குத் தம்முன்னுருவைக்காட்டி நின்றனரென்
பதுகாண்கவென்க.

இனியின்றியமையாக் காட்சிதேற்காட்டுவதன்றிமற்றை
யவிரிக்கிற்பெருகுமென்க.

அல்லதூஉம் - சுருவென்பத னீற்றுயிர்மெய்யோடு ராய
னென்பதின் முதலுயிர்மெய்புணராப் புணர்க்கையாய் நின்ற
தாகலி னிங்ஙனமானந்த வடிவராகிய பிள்ளையாருந்தாங்கொண்
டருளிய மானிடத்திருவுருவோடு புணராப் புணர்க்கையாய்நின்
றன ரெனக்குறித்தற்கென்பதுமாமென்க.

அல்லதூஉம் - குறிலிணைக்கெதிர் நெடில்குறிலெண்ணீடா
கநிற்பவு மீற்றினவ்வெண்ணீ டின்றியொற்று நிற்பவுந்தொடர்
ந்தமொழியாகலிற் பிள்ளையாரும் பக்குவர்க்கு மறைப்பொரு
ளாயு மதிபக்குவர்க் கநுபவப்பொருளாயு மிவ்விரண்டினுங் க
லவா ததீதப்பொருளாயு நின்றன ரென்று குறித்தற் கென்பது
மாமென்க. இங்ஙனம் சுருராயனென்பதிற்சுவ்வென்பது இரு
ள் ருவ்வென்பது அருள் ராயனென்பது விளங்கச்செய்கின்றோ
ன்பொருளாம் இதனால் சுவ்வென்னு மசுத்தாவத்தையினின்றோ
ரா ருவ்வென்னுஞ் சுத்தாவத்தையிற் றாம்நின்ற வண்ணநிறுத்
துகின்றோர் குருவாவர் இச்சுத்தாவத்தைக் காதாரனாகியு மதீத
னாகியும் விளங்கி யிவ்வவத்தைதனினின்று மக்குரு வாயினோர் தா
மாதவண்ணம் அருள்செய்துநின் றதீதப்படுத்து கின்றோன் ரா
யனாவன் ஆகலி னிதனானும் புணர்கவென்க.

எழுத்தாதிப் பல்வகைக்குறிப்பிற் பொருணெறிப்பற்றிநி
ன்றநோக்குஞ் செறிவுநட்ப மிங்கிதமின்பங் கம்பீரமுஞ் சிறப்பு
றுதி முதலிய நற்குணந் தழீஇய சொற்புண ரீதென்றே யாசி
ரியரும் சரிதாதி நான்கினுக்குமென்னுந் திருவெண்பாவினி

டைக்கட் குருராயனென்றிதன்பெருமைதோன்றவைத்தனரென்க இஃதின்னும்விரிக்கிற பெருகுமென்க.

வாதுவென்ற சம்பந்தனென்பதிற் பொருளாவானே வாதுவென்ற வென்றதென் குறித்தோவெனின் எண்வகைக் குன்றத்தெனனுப்ரவராய பாயுடுக்கைப் பறிதலைச் சமணர்களொருங்கேகூடித் தென்மதுரைக்கட் செந்தமிழ்ப்பாண்டியனைமுன்னிட்டுச் செருக்காற் செய்தசுரவாதம் அனல்வாதம் புனல்வாதங்கள் பிற்படத் திருநீற்றானுந் திருவாக்கானும் வென்று திறல்கொண்டமையன்றியும் பரசமயகோளரியென்று தாமே பொலித்த திருச்சின்னத்தின் றெய்வப்பேரொலிகேட்டெம்பொருமதெதிரிட்டுமறித்த போதமங்கைப் புத்தநந்தியின் பொய்த்தருக்கமும் புழுத்தலையும் பொடிபட்டழியவும் பின்னருள்ளதுபோன்றில்லதைப்பற்றிச் சாக்கியக்குழுவட்டலைவனுபசாரிப்புத்தன்சிற்சிலவகையாற் செய்த சமயவாதந் தலைதடுமாறவுஞ் செந்தமிழ்வேதத் திருமுறைதாங்கி மேம்படுமதிஞரான் வெற்றிகொண்டமையுந் திருவோத்தூரின்கண் ணரனுக்கிடுபனை யாண்பனையாயிற் றெபென்றசதியாடியவமணக்குழுஉக்களின் வாய்வாதங் கணமன்னப்பட்டொழியத்தாந் திருவாய்மலர்ந்த திருக்கடைக்காப்புளோர்மொழியானே யவ்வாண்பனைபெண் பனையாகச்செய்து விறல்கொண்டமையுங் குறித்ததென்க.

அல்லதூஉம் - வாதென்பதிலக்கணையாகக்கொண்டுபெருமணநல்லூரின்கட் டிருமணநல்விழாவைத் தரிசிப்பான் வந்தமக்கட்கெல்லாந் தொன்றுதொட்டிடைவிடாதுடனிழற்போற் சூழ்ந்துளபிறவிப் பெருவாதுகளைத்தும் வென்றதூஉம்-திருப்பாச்சிலாச்சிராமத்தின்கண் மழவன் மகளார்க்கடுத்த முயலகவாது வென்றதூஉம்- மருகற்கண்ணோர் வசியனுக் கடுத்தவிடவாதுவென்றதூஉம் - இவைமுதலியவுங் குறித்ததெனினுமாமென்க. வெற்றிகொண்ட பொருட்டிறன் முதலியவற்றுளொன்றேனுந் தோன்றக்கூறாதிலேசானே வாதுவென்ற வென்றதென் குறித்தோவெனின் பிறர்க்கிங்ஙனம் வேறல்தம்மானுந் துணைமையானும்பற்பலநாட் பற்பலவகையின் முயற்சிசெய்து முற்றுதெனினும்பிள்ளையார்க்குச் செந்தமிழ்மொழியுந் திருவாக்கானே யான்றாண்டவ்வேறன் முற்றியதென்பது குறித்தென்க. வாதென்பது குருராயனென்பதனோடுஞ் சம்பந்தனென்பதனோடுஞ் சாராது நடுநின்றமையின் அத்துவிதநெறியினுஞ் சேராது துவிதநெறியினுஞ் சாராதுநின்ற பதிதவாதிகளதுபயனில்வாதமெ

னினுமமையுமென்க. எதிரோற்கப்பட் டெதிர்வினைகீழ்ப்படமே
ற்கொள்வினையெழுச்சிப்பொருளின்வந்தவெல்லென்னும்பிறவி
னைப்பகுதியா னடுத்தவென்ற வென்னும்பெயரொச்சஞ் சம்பந்
தனென்னும் பெயர்கொண்டு முடிந்தது இங்ஙனம் வெற்றிகொ
ண்டபருவம்பிள்ளையார்க் கிளங்குமாரப்பருவ மெனக்குறித்த
தென்க. என்னைஎச்ச மென்பதிளஞ்சேய் மேற்றாகலின்.

சம்பந்தனென்பது பிள்ளையார்க்கு மூவகைக்கண் மூவு
லகும்புகழப் பொற்பொடுபுணர்ந்த வற்புதத் திருப்பெய ராக
வின் ஆண்டுபெருமா னருளப்பிராட்டி யாரளித்தசிவ ஞானத்
தெள்ளமு தருந்தியச்சிவஞானத்திற் குரிமைபூண்டமை குறித்த
தென்றுணர்க. ஆயிற்சிவஞான சம்பந்த னென்றோது சம்பந்த
னெனவைத்த தென்கொலோவெனின், சிவஞானமு மன்றிச் சி
வாநந்தமாநந்தாதீதமென்பவைக்கு முரிமைபூண்ட தலைமைய
ற்றியும் அவற்றையுலகுயிர்க் கிங்ஙனமென் றுணர்த்தியுரிமைசெ
ய்விக்கு மாட்சியற்றியுமங்ஙனம் வைத்ததென்க.

அல்லதூஉம் - சுருங்கச்சொல்லுதல் வனப்பினாற் சம்பந்த
னெனவே சிவஞானசம்பந்தனென வுரிமைச்சிறப்பு வழக்காற்
றானே தோன்றுமெனவைத்த தெனினுமாமென்க எங்ஙனமெ
னின் இந்திரனென்பது இறைமைச்சிறப்பு வழக்காற்றேவேந்
திரனையும்உடையானென்பதுபொருட்சிறப்புவழக்காற்பொன்
னுடையானையுங் குறிக்குமாகலினென்க. வள்ளன்மலர்த்தாளெ
ன்னும் ஒருவகைவனப் பிருவகைச்சந்தி மூவகைமொழித்தொ
கைச்சொற்றொடர்க்கண் வள்ளலென்னுங் குணிப்பெயர்வினைமு
தற்றொழிற்பயனுறப் படுமுடைமைக்குணப் பெயராய்நின்று
பிள்ளையாரது திருவடிகடம்மை யடைந்தோர்க்குவரை யாதா
நந்தப்பேற்றையளித்து அவரைத்தாங்கிக் கோடலைக் குறித்த
தென்றுணர்க.

அஃதேலாநந்தப் பேற்றைத்தருதற் குந்தாங்கிக்கோடற்
குங்கருத்தர் பிள்ளையாரன்றோ வங்ஙன மிருப்பத் திருவடிகட் கி
ங்ஙனங்கூற லெங்ஙனமெனிற் றிருவடிகடம்மை வழிபடுவோர்
க்கிரங்கி யின்பமீதற் பொருட்டெழுந்தருளும் பிள்ளையாரது
படர்ச்சிநிகழ்ச்சிக் கருவியாய்நின்று அவரை யவ்வழி படுவோர்
பால் வருவித்தலானும் ஞானதீக்கை பண்ணுங்கா லவர்சென்னி
யிற்சூட்டப்பட் டைக்கியம்வருவித்தலானு நித்தியாநந்தப்பே
று வாய்க்குமாகலி னிங்ஙனமென்க.

அல்லதூஉம் - வாட்டமிலருளுங் கோட்டமில்குணனு ம
சையாநிலையு நசையாமனனும் வெகுளாப்பண்பும் விடாப்பே
ரன்புஞ் செவ்வியின்மரீஇ யெவ்வெவ ரெவ்வகை வேட்டனரவ்
வகை விருப்பொடுகுறிப்பின் வரையாதீதல் வள்ளற்றன்மை எ
ன்பவாகலி னிவ்வள்ளற்றன்மையைத் தம்பாலடைந் தோரிடை
யடைவித் தருளுங்கருணை பற்றியங்ஙனங் கூறியதெனினு மமை
யுமென்க. அஃதேல் வள்ளற்றன்மைவழங்குமலர்போலுந் திருவ
டியென்றன் றோவுரைவிரித்தல் வேண்டுமங்ஙன மின்றிவள்ளற்
றன்மையுடைய மலர்போலுந்தாளென விரித்திருக்கின்றதேயெ
னின் அங்ஙனமடைவித்தலும் வள்ளற்றன்மையே யாகலினுமு
டையதொன்றன்றே யுதவப்படுமாகலினு மிங்ஙனம்விரித்த லங்
ஙனங் கூறற்கு மமைதியாமென்க.

அல்லதூஉம் - அருளின்றியமையாத வள்ளற்றன்மைக்கவ்
வருளேமுதற்காரணமாமாகலின் ஆநந்தவடிவாகிய பிள்ளையா
ரவ்வாநந்தப் பேற்றையளிக்கும் வள்ளற்றன்மைக்கு முதற்கார
ணமாகிய திருவருட்சத்தியே திருவடியென் றுகுறித்தற்குக்கார
ணத்தைக் காரியமாக வீண்டுபசரித்ததெனினு மமையுமென்க.

அல்லதூஉம் - எமது திருவடிகளை வழிபடின் வீட்டின்ப
மெளிதிற்பெருவேமென்று பிள்ளையார் விதித்தருளிய வருள்விதி
ப்படியறிந்து வழிபடி னவ்வழிபாட்டா னவ்வீட்டின்பந் தரப்
பெறுத லுண்மையாகலி னவ்வுண்மைநோக்கியீண்டு கூறியதெ
னினும் பிள்ளையார்திருமேனி முற்றுந் தெய்வத்தன்மை பூரண
மாகலி னதனையறிவிக்க வீண்டுகூறியதெனினு மமையுமென்க.
திருவடிகட்கு அடையாய வள்ளலென்பதூஉம்- ஆசிரியர்பெய
ராய வள்ளலென்பதூஉம் அடியிணை எதுகைத் தொடையாய் எ
ழுத்தசை சீரொலி பொருளாதிகளானொற்றுமைகொண்டு நின்
றுபிள்ளையாரது திருவடித்தீக்கைக்கு மாசிரிய ரதிபக்குவத்தன்
மைக்குமுள்ள வொற்றுமைப் பொருத்தம் விளக்கினவென்க.

வள்ளலென்பது-பிள்ளையார்க்குக்காரணச்சிறப்புப் பெய
ராகக்கொண்டு பொருள்கூறுவாருமுளர் அங்ஙனங் கூறினித்து
ணைச் சிறப்பின்றென்றுமறுக்க என்னெனின் அவயவச்சிறப்பா
னவயவிக்குணம் வெளிப்படுத்தலே பெரும்பாலுமின்பமாகலி
னென்க.இதனைப் போற்றி மானான்முகனுங் காணாதபுண்டரீகம்
என்பதனாற்காண்க வென்க வள்ளமலர்த்தாளெனப் பாடமோ
திவள்ளம்போலுங் குவித்தவாய்மலரான மலர்களையுடையாகவுரை

விரிப்பாருமுளர் அங்ஙனம் விரித்தவினித் துணைப்பெரும்பயனி ன்றெனமறுக்க. இங்ஙனமின்னும் விரிக்கிற்பெருகுமென்க.

மலரென்பது- வள்ளற்றன்மையி னருகுவைத்தமையின் கண்டு நிறைதலுங்குறைதலுமாயுள்ள நீர்நிலைகட் டோன்றியுமழி ந்தும்விரிந்துங்குவிந்தும்வாடியுநின்றுவண்ணமுநறையும் வா சமுஞ்சிறிதே சிறப்பாகக்கொண்டு பறித்தலாதிய சிறுதொழி ற்படுமலர்களை நீக்கி ஆண்டதிரிபிலாத்தெய்வத்தலைவர் நிலைக்க ண் ஞெகிழியாமலர்ச்சியுமழியாமணமும் பொன்னிறப் பொலி வும் இன்னறவொழுக்கு மென்மையுந்தண்மையும்வியப்புறுமு ருவுங்கண்டோர்கண்கவர் காட்சியுமாட்சியுங் கொண்டு முக்கால முங் குன்றா மலராக் குறித்தமைகாண்க. என்னெனிற் பிள்ளை யார்திருவடிகள் மெய்ஞ்ஞானவிளக்கமா யருண்மணம் வீசிப் பொன்னிறம் பொலிந்து ஆநந்தமொழுக்கி மெல்லெனவுற்றுத் தண்ணெனக்குளிர்ந்து தரிசிக்கின்றோர் வியப்புறுமுருவா யவர துவிருப்பநோக்கம் பரவவென்று மொருதன்மையவா யிருக் கின்றமையினென்க. ஆயின்மலர்போலுந் தாளென்றுவமைவிரி ந்தபடி நிற்றற் கிடங்கொடாது மலர்த் தாளென்றதென்னெனின் அத்தெய்வத்திருமலர்தனைக் கண்டோர்க்குச்சிறிய விடயாநந்தந் தருதலேயன்றித் திருவடிபோற் சிவாநந்தந் தரமாட்டாச் சிறு மைநோக்கியென்க.

அல்லதூஉம் சுபவடிவாய் எவ்வகைச்சுபங்கட்கு முன்னின் றதனை விளங்குறச்செய்வதாய் மகிழ்வுடையோர்யாருமேற்கொ ண்டணியப்படுவதாய் நிற்கு நன்மலர்போலு மெனக் கூறினும மையும் என்னெனின்திருவடிகள் அருள்வடிவா யாநந்தப்பேற் றிற்கு முன்னின்றளிப்பதா யறிவுடையோர்தந்தலைமேற்கொண் டணியப்படுவதாய் நிற்றலினென்க.

அல்லதூஉம்-மலரையடைந்த வண்டுகளதனதுதேனுண்டு களி கொள்ளுதல்போற் றிருவடிகளையடைந்தோரும் அருளாநந்த ம்பெற்றிறுமாத்தலி னிங்ஙனங்கூறிய தெனினுமமையுமென்கஇ தனைத் தொகையுவமையணியாகக் கூறலின்றி வள்ளன் மலர்த்தா ளெனக்கூட்டி யற்புதத்தொகை யுவமை யணியாகக் கொண்டு பொருள்கூறுவாரு முளரவர்கூறுங் கூற்றிற் பெரும்பய னின் றெனமறுக்க இஃதின்னும் விருக்கிற்பெருகுமென்க.

தாள்என்பது அடிகட்கன்றியும் முயலுதற்கும் உண்ணி ன்றபொருள் வெளிப்படாமைக்கு மதனைவெளிநின்றோருட்செ ன்றுகவரப்படாமைக்குங் காப்பாகக் காப்பினிற்குங் கருவிக்கு

மணிதற் கணியினிருகடையு மிணைத்துநிற்கு மிடைப்பூட்டிற்கு மிடனாகிவந்த பல்பொரு ளொருசொல்லாகலின் திருவடிகள் தம்மையடைந்தோரை யாநந்தநிலையுட்சேர்த்தலு மங்ஙனஞ்சேர்ந்தோர்மீட்டுமவ்வாநந்த நிலையினின்றும் போதவலைசவும்தாற்றிவெளிப்படாமைக்கு மவத்தைகளுட்சென்று தாக்கிக் கவரப்படாமைக்குங் காப்பாகவருளுருவாய தன்முன்னிற்றலுஞ் சிவத்துடன் சிவனையிடைநின்று கூட்டுவித்தலுங் குறித்ததுகாண்க இக்குறிப்புணர்த்தவன்றே மலர்க்காலென்னாது மலர்த்தாளென்றதென றுணர்க.

தலைமேல்வைத்து என்பது -ஆசிரியர்- தம்மாசாரியராகிய பிள்ளையார்திருவடித் தீக்கை செய்யத்தாம் பெற்றமைகுறித்ததுகாண்க. அஃதே தலைவைக்கப்பட்டு எனச்செயப்பாட்டுவினையெச்சத்தானிருத்தற் பாலதன்றோவெனின் ஆசிரியர்க்குத்திருவடிககண்ணேயுள்ள பிரியத்தொடர்ச்சியின் பெருமைதோன்ற விங்ஙன நின்றங்ஙனங் குறித்ததென்க. இதற்கு இவ்வாறன்றித் தலைமேற் பாவனையான் வைத்தெனக்குறித்ததென்று கூறுவாருமுளராலோவெனின் அவ்வாறு கூறிற் - பிள்ளையாரிந்நூலாசிரியர்க்கு ஞானாசாரியரென்பது மிவர்ஞானதீக்கையுடையாரென்பதும்விளங்குதலின்றிமற்றையாசிரியர்போலெடுத்த நூலினிதுமுடிதற்பொருட்டுப் பாவனையான் வழிபடுகடவுட்பழிச்சினரென்றிலேசிற்கருதப்படுமாகலினங்ஙனங்கூறன்மரபன்றென்க. தலையில்வைத்து என்னாது தலைமேல்வைத்து என்றமையான் மறைமுடிக்கண்ணே வயங்காநின்றவச் செல்வத்திருவடியின் சீர்மைதோன்றிற்றென்க.

ஓர்ந்துஎன்பதில் - ஓர்என்னும் பிறவினைமுதனிலை - அறிவுதனக்கெதிரிட்டவுணர்ச்சிப்பொருட்கண்ணெதிரிடுவதுபோன்றெதிரிடாதுள் ளாழ்ந்தவப்பொருட்டிற னெதிரிடப் பெயரும்புடைபெயர்ச்சியு மெதிரிட்ட பின்னர்விகற்பியாதெதிர்க்குந்தொறு மெதிரிடப்பெயரும் புடைபெயர்ச்சியுங் கோடலிற்கருவித்திறனுந்தன் றிறனும் அருட்டிறனும் உற்றுணர்ந்தவ்வுணர்ச்சிவிகற்பியாது தேறிநின்றமையைக்குறித்ததுகாண்க. இக்குறிப்புத்தோன்றவன்றே திருவள்ளுவநாயனாரு மோர்த்துள்ளமுள்ளதுணரி னென்றாரென்றறிக.

உள்ளத்தழிவி லென்பதி லுள்ள மென்பதன் பகாப்பதமியற்றுப் பகுபதப்பொருளி னிடவாகு பெய ராயணுப்பொருட்கண் வந்தவுள்ளென்னும் பகுதி யுட்புறத்து மப்போதமெ

ழுஞ்சிற்றசைவும் போரசைவுங் குறித்ததுகாண்க.

உள்ளமென்பது வாதனையாலுள்ளெழும்போதத்திற்கா
குபெயராயது - வள்ளலென்பது போன்றெழுகிசையாய்வரவு
ள்ளவழிவிலென்றது பொருத்திசையாய்வர உள்ளத்தழிவி லெ
ன்றதென்கொலோவெனின். வேற்றுமைவழியாகலினும் போ
தவசைவு சார்பின்றியமையாமை குறிக்கவேண்டு மாகலினும்
சாரியையோடு புணர்த்தி யங்ஙனங் கூறியதென்க. அழிவுஎன்ப
தில்அழியென்னும் பொதுவினைப்பகுதி முன்னர்த்தோற்ற நிக
ழ்ச்சிப் பின்னரோர்காலத்து மோரிடத்துமின்றிக் கெடுதற்பெ
யர்ச்சிக்கண்வந்ததாகலினப்போதநிகழ்ச்சிபின்னரொக்காலத்து
ம்உட்புறமென்னு மெவ்விடத்துந்தோற்ற நிகழ்ச்சியின்றியொ
டுங்கியவாறு குறித்ததென்றுணர்க, இங்ஙனமன்றி உள்ளத்தழி
விலென்பதற்கு மனத்தினசைவற்ற விடத்தெனப்பொருள் கூறு
வாருமுளராலோவெனின் - மனத்தினசைவுபோத வசைவிற்
றனே யறுமாகலினு மஃ தருதவிடத் திஃதெவ்வாற்றானு மரு
தாகலினுமது பொருந்தாதென்க - இதனை ஆசிரியர் கூறியபற்
றதுபோதும் பதறுமென்னுந்திருவெண்பாவாற்காண்கவென்க

அடுக்குந்தேனென்பதி லடுக்குமென்பது - அடுத்தலெ
ன்னுந் தொழிற்பெயர்க்கட்டல் விகுதிதன்னொற்றுச் சந்தியொ
டுநீங்கவெதிர்காலப் பெயரெச்சவிடைநிலை யும்மை ககரமெய்ச்
சாரியையூர்ந்துதன்னொற்றுச்சந்திபெற்றுண்டு நின்றிறையுமிட
ப்பாடுதோற்றாது செறிதற்பெயர்ச்சியும்அடுக்கலென்னுந்தொ
ழிற்பெயர்க்கண்ணல் விகுதிநீங்கவவ்வெதிர்காலப்பெயரெச்சவி
டைநிலை யும்மைவிகுதிநீங்க நின்று தன்வரவுகண் டோடியகுற்
றுகரமூர்ந்தமெய்க்கண்ணேறிநின் றிறையுமிடைப்போதின்மை
படாதுபன்முறை மேன்மேலுறுதற்பெயர்ச்சியும் பொருளாக
க்கொண்டிருவகைப்பகுதி யொருவகை யெச்சமாக நிற்றலின்
சிறிதுமிடத்தானுங் காலத்தானும் பிரிவுதோன்றாது செறிந்து
பன்முறை மேன்மேலெழுமாநந்தத்தேனென்று குறித்ததென்
றுணர்க.

உள்ளத்தழிவிலடுப்பது ஆநந்தமாகலிற் றேனென்பதை
யுவமக்குறிப்பாற் சிவாநந்தத்தேனென்றதென்றுணர்க.

தேனுண்டவண்டசைவின்றியத்தேன்மயமாயிருத்தல்போ
ல-ஆநந்தாநுபவத்தர் போத வசைவின்றி யிவ்வாநந்தமயமாயி
ருத்தலி னுவமையாகக் குறிக்கப்பட்டதென்றுணர்க. இதனை

யொப்புமைக்கூட்ட மொட்டாதிகளாகக் கூறுவாருமுளராலோ
வெனி னவ்வாறுகூறினும் பொருள்சிதையாமையி னொருவாற
மையுமென்க. போதவகையின்கட்டோற்றல் விடயாநந்தமாக
விற் போதவொழிவின்கட்டோற்றல் சிவாநந்தமெனக்குறித்தற்
குள்ளத் தழிவிலடுக்குந் தேனென்றதென்றுணர்க. எங்ஙனமெ
னின் உள்ளத்தழியாமையி னடாத்தேனென்றெதிர்மறுக்கப்படு
தலினென்க. மதுரம்பற்றித்தேனையாநந்தத்திற்குவமைகூறுவா
ருமுளராலோ வெனின் அதுநாவிடையமா யிறைப்போதுநி
ற்றலினித்துணைச்சிறப்பின்றென்க.

அன்பரெலாமுண்ண வென்பதில்அன்பர் என்பது [illegible]
ருள்புகழாதியைக் குறித்துப்பயில்வோரை நீக்கிச்சிவாநந்தமே
ந்நாளடைதுமென் றிடைவிடா ததனையே விரும்பிப்பயில்வோ
ரைக்குறித்ததென்றுணர்க. எலாமென்பது - சரிதாதிகன்ம மா
ர்க்கங்களைக்கூறும் பிறநூல்க ளெல்லாம் பருவநோக்காது சாதி
சமயாசாரவிகற்பங்களை நோக்கிச் சிலரை நீக்கியுஞ் சிலரை நிறு
வியுமதிகரித்தல் போலாது அச்சாதி சமயாதிகளி னுயர்ந்தோர்
தாழ்ந்தோரியாரேனும் பருவத்தராயி னிந்நூற்குரியராவரென்
பது குறித்ததென்றுணர்க.

உட்கொளவென்னும் பொருளுட்கொண்டு பொருட்டு
ப்பொருளிற்போந்த உண்ணவென்னும் வினையெச்சம்ஆநந்தா
நுபவத்திற்கு விடாதவிலக்கணை யாயிற்றென் றுணர்க. என்னை
யெனில் உண்ணலிற் பசிநீங்கல்போல் ஆநந்தாநுபவத்திற்பசுத்
துவநீங்கலினென்க. பயன்காரணம்பற்றிவந்தவொழிவிலொடு
க்கநூலென்பது ஒழிவிலொடுக்க மென்னுநூல் ஒழிவிலொடுக்க
ந்திருநூலென விருவழிக்கும் பொதுவாய சந்தியான் வந்தமை
யிற்றன்னைவேதாந்தத்திற்குஞ் சித்தாந்தத்திற்கும்பொதுவென்
று குறித்ததென்றுணர்க.

ஒழிவிலொடுக்க நூலுரைத்தானென்பதில் வேற்றுமை
சாரியை யுருபுமுதலியவொன்றும் விரியாதுநிற்றலின் ஞானா
சாரமன்றிக் கருமாசாரமொன்றும் விரியாத விந்நூலி னின்ம
லத்தன்மை தோன்றிற்றென் றுணர்க. உரைத்தானென்பது - ஒ
ருவர் மதிநுட்பத்தாற் றங்கண்டறிந்த மாற்றுயர்ந்த பொன்னி
ன்றன்மையைப் பிறருமறிந்து பயன்கோடற்குக் கட்டளைக்கல்
லினுரைத்துக் காட்டல்போற் சுருதிகுரு வநுபவத்தாற் றாமநு
பவித்தறிந்த சிவாநந்தப்பேற்றின் றன்மையைப் பக்குவரும
றிந்து பயன் கோடற் பொருட்டு நூற்கணுரைத்துக் காட்டினு
னென்று குறிப்புறுத்திற்றென்றுணர்க.

என்னெனி லுரையென்பது பொன்னுரையும் பொருளாகக்கோடலி னென்க. உரைத்தானென்னுபயனிலை - செயப்படுபொருளி னிறுதியினிலையாது செய்ப்படுபொருட்குங் கருவிப்பொருட்கு மேற்றாடலை மேல்வைத்து என்பத னிறுதியிற் றொடர்ந்து நின்றதென்னெனிற் சிவஞானத் தீக்கையுடையரா யுரைத்தா ரென்பது மன்றித் தமதாசாரியர் திருவடி சான்றாகத் தாங்கண்ட வநுபவத்தை விளங்க வுரைத்தா ரென்பதூங் குறித்தற்கென்க என்னை.

தாடலைமேல்வைத்து எனவே சான்றாகவைத்து என்பது தா[illegible]னயமையுமாகலின் - தலைமேல்வைத்து என்பதன்பின்னிற்கக் கடவதாய ஓர்ந்து என்பது செய்ப்படு பொருடபி னிறுதிநிலையாய் நின்றதென்னெனின். இந்நூல்கற்றோர்க்குக்கருமங்துறந்து ஞானமேவிடுதலுண்மைகுறித்தற்கென்க. எங்ஙனமெனின் அவ்வோர்ந்துஎன்பது வினைக்குறையாகலினென்க உள்ளத்தழிவிலடுக்குந்தேனை யன்பரெலா முண்ண வொழிவிலொடுக்க நூலோர்ந்துரைத்தான்எனக்கொண்டுபோதவொழிவின்கண்ணடுப்பதாய வாநந்தத்தை யன்பரெல்லா மநுபவிக்கும் பொருட்டு வேதாகமுடிபான ஞானநெறியை யாராய்ந்து ஒழிவிலொடுக்க மென்றோர் நூலை யுரைத்தார் எனப்பொருள் கூறுவாரு முளர். அங்ஙனங்கூறின் ஆசிரியர் பரஞானமுடையா ரென்பது தோற்றும். அபரஞானமுடையாராகப் பொருள்படுமாகலினும் அபரஞானத்தாற் கூறப்பட்ட நூல் மிகச்சிறவாமையானு மதுபொருந்தாதென்க.

இந்நூலியற்றற்கேற்ற நற்பொருளுடைமையுஞ் சிறப்புப்பாயிர விலக்கணத்து ளாக்கியோன் பெயரே யெனமுதனிறுத்தப்பட்ட நிமித்தகாரணச் சிறப்புடைமையும் இச்செய்யுண்முடிபுக் கெழுவாயாந்தலைமை யுடைமையும்பற்றி வள்ளலென முதனிறுத்தியதென்க. இந்நூலாசிரியர்க் காசிரியரிவரென்பது தோன்றற்கு அவ்வள்ளலென்ப தன்புடைகுருராய னென்பதை நிறுத்தியதென்க. இங்ஙனம் ஆசாரியரென்பவர் பிள்ளையாரென்பதுதோன்றற்கு ஞானசம்பந்தனென வைத்தல்வேண்டுமாகலின் அந்தஞானத்தைக் குறிக்கும் பாசவெற்றியாய வாதுவென்றவென்பது முன்கூட்டிச் சம்பந்தனென வதன்புடை நிறுத்தியதென்க.

இரண்டாமடிக்கட் பிள்ளையார் தாள்க ணிறுத்தத் தொடங்கி முன்னர் அத்தாள்களி னியற்கை யருளென்றுகுறிக்க வள்

ளலென்றும் அதன் வடிவமாநந்தமென்று குறிக்கமலரென்று
முறையேவைத்து வள்ளன்மலர்த்தாளென நிறுத்தியதென்க. தா
ள்களன்றியும்- பிள்ளையாரும்அருளியற்கையமோயென்பது குறி
க்கச் சம்பந்தனென்னுஞ் சத்தந்தோற்றியவுடன் வள்ளற்சத்த
ந்தோன்றநிறுத்தியதென்க. இங்ஙனம் நிறுத்தியவை - சொற்
பொருண்முறைநிலை- தாளென்பதற்குந் தலையென்பதற்குமுள்
ளசொற்பொருட்சம்பந்தவின்பம்பற்றித் தாடலையென்றும்தலை
யென்பதற்கும் மேலென்பதற்குமுள்ள உரிமைநோக்கம்பற்றி
த்தலைமேலென்றும் மேலென்னுமிடப்பொருட்குவைத்தற்றொ
ழிலசிறந்ததுபற்றி மேல்வைத்துஎன்றும் வைத்துஎன்பதற்கும்
உரைத்தாளென்பதற்கும்இறுதியுமுதலுமியைபாதல்பற்றி வைத்
துரைத்தாளென்றும் முறையேநிறுத்தியதென்க. இங்ஙனம் நி
றுத்தியவை சொன்முறைநிலையும் சொற்பொருண்முறைநிலையு
மாம்.

இங்ஙனம் முற்றுமுறைநிலை கூறப்புகின் மிகப்பெருகு
மாகலி னொருவாறுகாட்டினம் மற்றையவு மிவைகொண்டுணர்க
வென்க. இச்செய்யுட்பொருள் ஆசிரியரதருளறிவின் மாட்சி
மையைவெளிப்படையானுங் குறிப்பானும் விளங்கவிரித்தலின்
வாகைத் திணையுட்சால்பு முல்லைப்பொருளின் பாற்பட்டதென்க
என்னைசால்புமுல்லைப்பொருள்-வான்றோயுமலையன்னசான்றோ
ர்தஞ்சால்புரைத்தன்று என்பவாகலின் இச்செய்யுள்தன்னுட்செ
யப்படுபொருளாய்நின்ற நூற்சிறப்பைத் தன்னானுந்தன்னுறுப்
புக்களானுங்குறிப்பாற்குறித்து நின்றநன்றேககுடைச்செய்யு
ளென்றுணர்க. அங்ஙனங் குறித்தவையெங்ஙனமெனின்.

இச்செய்யுள் தான் கலிப்பாவஞ்சிப்பா ஆசிரியப்பா
வென்னு முப்பாவினுஞ் சிறந்தவெண்பாவாகலினிக்குறிப்பால்
இந்நூல்சரிதைநூல் கிரியைநூல் யோகநூல் என்னு மூந்நூலி
னுஞ்சிறந்தஞானநூலென்றுகுறித்ததென்கதான் ஈரசையானுசி
ட்டிநவகைத்தளைசழீஇ யொழுகிசைச் செப்பலோசையான்வ
ந்ததாகலினிக்குறிப்பா லிந்நூல் ஆகமமுடிவும் வேதமுடிவுங்
கூறுமிருவகை நெறியுமொருவகை நெறியாத்தழீஇக்கொண்டி
ருந்தமைகுறித்ததென்க.

தான் ஒன்றடுத்தவிரட்டை முப்பத்தா றெழுத்துக்களை
க்கொண்டு நிற்றலினிக்குறிப்பானிந்நூல் பாசமொன்றடுத்த த
த்துவமுப்பத்தாறென்று மம்முப்பத்தாறன் றன்மையிவையெ

ன்று பகுதறிதல்வகையு முணர்த்துவதெனக்குறித்ததென்க. தா
ன்நான்கடுத்த முப்பத்தாறசைகளை யசைத்துநிற்ற லினிக்குறி
ப்பானிந்நூல் அத்தத்துவ முப்பத்தாறனையு நியதிகளைதன் மு
றையையுணர்த்துவ தெனக்குறித்ததென்க. அஃதேன் முப்பத்
தாறன்மேனுன் கடுத்ததென்னெனின் - ஆன்மதத்துவத்தின்வன்
மைதோன்றத்கோரசையும் வித்தியாதத்துவத்தின் வலிதோன்
றற்கோரசையுநாததத்துவத்தின் பெருமைதோன்றற் கிரசையு
மிருந்தனவென்க. தான்-பதினைந்துசீர்சீர் கொளநிற்றலினிக் கு
றிப்பானிந்நூல் ஆசாரியத்தன்மை சீடத்தன்மைபதித்தன்மைப
சுத்தன்மை பாசத்தன்மை உபதேசத்தன்மை பக்குவத்தன்மை
யோகநிவர்த்தி கிரியைநிவர்த்தி சரிதை நிவர்த்தி விரத்திவிளக்க
த்துறவுத்தன்மை யருளவத்தைத்தன்மை வாதனைமாண்டார் த
ன்மை நிலையியல்பு என்னுமிப்பதினைந்தனையுஞ் சீர்பெறக் கொ
ண்டதெனக்குறித்ததென்க.

தாமெழுவகைத்தளையினியைந்ததாகலினிக்குறிப்பானி
ந்நூல் ஆன்மதரிசனம் அருட்டரிசனம் பரைதரிசனம் பரை
போகம் பரையோகநீக்கம் போதமொழிவு இன்பப்பேறு என்
னுமெழுவகைநிலையு மியைவிப்பதெனக் குறித்ததென்க. த ன்-த
னிச்சொல்பெற்று நான்கடியுடனடந்ததாகலி னிக்குறிப்பானி
ந்நூல்கூறுமொப்பற்ற ஞானமும் சுத்தச்சரிதை சுத்தக்கிரியை
சுத்தயோகம் சுத்தஞானம் என்நான்குபாதத்தோடு நடப்பதெ
னக்குறித்ததென்க. தான் - ஒரூஉத்தொடையொடு முத்தொ
டையானியன்றதாகலி னிக்குறிப்பா னிந்நூற்சுருதிகுருஅனுப
வமென்னு மூன்றுமொத்தியன்றதென்க குறித்ததென்க.

அல்லதூஉம் - இச்செய்யுளடிநேரடியாய்விதித்தவெழு
த்தெல்லையினிகவாது நிற்றலினிக் குறிப்பானிந்நூல் மெய்வீட்
டினெறித்தா யவ்வீட்டினெறிக்கெல்லையாய ஞானத்தினிகவாது
நின்றதெனினுமாமென்க. எல்லையென்னெனிற்பத்தெழுத்தென்ப
நேரடிக்களவேயொத்த நாலெழுத்தோற்றலங்கடைபேயென்ப
வென்க இங்ஙனங்குறித்தற்கன்றே இச்செய்யுளீற்றடியினுற்பெ
யரை வேறடைகொடாது தனிமையினிறுத்தியதென்க.

இச்செய்யுள் சிறப்புப்பாயிரத் ததாயினப்பாயிரத்தில்
சீகணமிதனுளிருந்த வாறெங்ஙனமென்னின் வள்ளலென்பதனு
லாசிரியர்பெயரும் குருராயன்வாதுவென்றசம்பந்தன்வள்ளன்
மலர்த்தாடலைமேல் வைத்துரைத்தா னென்பதனுன் ஞாநாசா

ரியாராகிய பிள்ளையாரருளுபதேச வழித்தெனவுட் கொளப்ப
டுதலின்வழியும் இந்நூற்றொடர்தமிழ்த் தொடராக வினித்தமி
ழ்வழங்குநிலமேயிந்நூல்வழங்குநிலமெனக்கருதப்படுதலினெ
ல்லையும் ஒழிவிலொடுக்கநூலென்பதனா னூற்பெயரும் ஒழிவி
லொடுக்கமென அன்மொழித்தொகைப் பெயர்மாத்திரையி னி
ல்லாது நூலென விரித்தமையி னிந்நூலுந் தொகைவிரியுடைய
தெனக்கருதப்படுதலின் யாப்பும்உள்ளத் தழிவிலென்பதனாற்க
ருதியபொருளும் அன்பரெலா முன்னவென்பதனால் அன்ப
ரெலாமுணற் பொருட்டிஃதியற்றுகவென் றுள்ளெழுந் தெழுதி
ட்டுநின்றதாசிரியரது பெருங்கருணையெனக் கருதப் படுதலிற்
கேட்போரும்உள்ளத்தழிவிலடுக்குந் தேனென்பதனாற்பயனும்
புலப்படுமாகலினவையிருந்தவாறிங்ஙனமென்க.

இப்பாயிரச்செய்யுள் முற்காலத்தது.

இவ்வுரை-சி-இராமலிங்கபிள்ளையவர்களாற்

செய்யப்பட்டது.



இஃது காஞ்சிபுரம் - மாசிலாமணி முதலியா ரவர்களால்

இயற்றப்பட்டது.



விருத்தம்.

வஞ்சியர்மாமோகமுறுமாதவத்தோர்புகழு ... ... ... ... ❀
மாதேவனருள்விளங்கிவளருநிதிப்புதைபோல் ... ... ... ❀
விஞ்சியசம்பந்தனடித்துணையுளங்கொள்வள்ளல் ... ... ... ❀
விளம்பியருளொழிவிலொடுக்கப்பெயர்கொண்முறையு ... ❀
மஞ்சனம்போற்றிருப்போரூர்ச்சிதம்பரமாமுனிவ ... ... ❀
ரருள்புரிந்தவதனுரையுமறிஞரினுய்வித்துத் ... ... ... ... ❀
தஞ்சமுறுமுலகுணர்வானச்சிலியைவித்தான் ... ... ... ❀
றகுமண்ணிப்பாக்கமகிழ்சபாபதிபூபதியே ... ... ... ❀



# அதிகாரவட்டவணை.

| வது | அதிகாரம் | செய்யுள் |
|---|---|---|
| ௧ | வேதாகமப்பொதுவிலுபதேசம் | ௬௩. |
| ௨ | சத்திநிபாதத்துத்தமொழிவு | ௨௮. |
| ௩ | இயோகக்கழற்றி | ௩௰. |
| ௪ | கிரியைக்கழற்றி | ௰௬. |
| ௫ | சரிதைக்கழற்றி | ௰௪. |
| ௬ | விரத்திவிளக்கம் | ௰௩. |
| ௭ | துறவு | ௨௫. |
| ௮ | அருளவத்தைத்தன்மை | ௪௨. |
| ௯ | வாதனைமாண்டார்தன்மை | ௯. |
| ௰ | நிலையியல்பு | ௰௩. |

ஆகச்செய்யுட்கள் - ௨௱௫௰௩.

இஃது.

சிந்தாத்திரிப்பேட்டை.

அண்ணாமலைமுதலியாரால்

அச்சடுக்கப்பட்டன.



## இந்நூலுரைபாடத்திற் சிலசில இடங்களினுள்ள மறைச்சொற்பொருட்குத் தெளிசொற்பொருள்.



௱-பவுரிக்கூத்து-வலமிடமாகச் சூழ்ந்தாடுங்கூத்து.

௨-குறுமன்னியர் - சிலராலறிந்து மதிக்கப்படும் பிரபுத்துவமுடையோர்

௵-மகாமன்னியன்-பலராலுமறிந்து மதிக்கப்படும்பிரபுத்துவமுடையோன்.

௵-பிரளயாகலர்-மும்மலங்களுளொருமலநீத்தோர் அவர் பிரமன் முதலானோர்.

௪-ஞாதுரு-காண்பான்- ஞானம்- காட்சி-ஞெயம்- காணப்பட்டது.

௫-சூக்குமைவர்க்கு-வார்த்தைதோன்றற்கு முதற்காரணமாயுந்தியிலேநாதவடிவாய் நிற்குமொருசத்தி-பரஞானம்- அநுபவஞானம்-அபரஞானம்-வாசகஞானம்.

௬-பகடிக்கூத்து-உள்ளதுபோன்றில்லாததைக்காட்டும் வெளிவேடம் அல்லது அகசியக்கூத்து.

௯-அரிப்பாளன்-குப்பை முதலிய விடங்களிற்பொன்முதலிய அரித்தெடுக்கின்றோன்.

௯-கொழுந்தாடை, கரும்பினுனித்தழை.

௰௨-சாயாபுருடன், தந்நிழலைப்பார்த்துப்பின் னாகாயத்தையுற்று நோக்கு கின்றார்க்கு அவ் வாகாயத்தின்கட் புருட வடிவம் போற்றோன்று மந்நிழற்காட்சி.

௰௫-பைமறித்தல், உள்ளிருந்தசரக்கு வெளிப்படப்பைவாய்த்தொட்டு உட்புறமேற்பட்டும் வெளிப்புற முட்பட்டு மடங்கமடக்கல்.

௰௭- கிண்கிணிவாய்ச் செய்தலர்தல், வட்டவடிவாக முகங்கொண்டுமலர்தல்.

௨௨-பஃறுளி, பலதுளி.

௩௫-பற்ற, பார்க்கிலும்.

௵-அருகித்தோற்றல், சுருங்கித்தோற்றல்.

௫௨-பிரோகம், காரியப்படுத்தல்.

௫௪-பிரதிபலிதம், எதிர்விம்பம்.

௫௯-சகசமலம், ஆனாதியாகியமலம்.

௯௫-கடா, வினா.

௬௪-விட்டிசையாதிசைத்தல், நடுவேதில்லாமலோலித்தல்.

௬௫-நக்கினம், நிருவாணம்.

௭௭-தேறிட்டநீர், தேற்றாங் கொட்டையாற் றெளிவிக்கப்பட்டநீர்.

௮௪-கவுசனை, யாதாயினு மோர்பொருளை யுள்வைத்துமறையமேன்மூடிக்கட்டுமேற்கட்டு.

௮௮-சுழல்விறிசு, கொள்ளிவட்டம்போற் சுற்றுவதாய ஒருவகைமருத்துவாணம் இத்தேயத்திக்காலத்தில் சுழல் புறிசு என்று வழங்குகின்றது.

௯௬-அநன்னியம், அன்னியமல்லாமை.

௱௫-நெற்பொலி, தூற்றுநெல்.

௱௭-தும்புசெறித்து, தும்புஅவிழ்த்து.

௱௰௬-அநுபவிக்கச்சிதைக்கும்,அநுபவிக்கவறிகின்றபோதும்

௱௪௨-அவித்தியாகதம், அஞ்ஞானமயம் வெறுவீடர்அநுபவிப்பதற் கில்லாமையால்விட்டோர் போன் றிருப்போர் கறண்டல் பற்களால்நெருக்கிப்புறண்டுதல்.

௱௭௧-சேட்டித்தல், தொழிற்படுத்தல் அல்லது குணக்கேடானதொழில் விளைத்தல்.

௱௭௭-சிங்கி, விலங்கு.

௱௮௮-நாங்கூழ், நாகப்பூச்சியென்னுமோர்கிருமி.

௲.-விகளம், மௌனம்.

௱௮௨-மடலெடுப்பு, பனைமடலாற் குதிரைசெய்தேறுதல்.

௱௪௫-மூடிகளசமுத்தி, மூடி கிரசு களசம் நீக்கம் முத்தி வீடு

௱௪௬-வாகியென்றவார்த்தை, இதுசெய்க விடுகவென்று நியாயமாகக்கூறும்வார்த்தை.

௱௫௧-வியாபகம்,கலப்பு வியாத்தி கலக்கப்படுவது.

௱௫௯-விசர்க்கரித்தல், விடுத்தல்.

௨௱-ஐவராசர், பாண்டு மக்களாகிய தருமன் முதலிய ஐவர்.

௨௰௬-மந்தகாசப்பிரகாசம், புன்னகைப்பிரகாசம்.

திருச்சிற்றம்பலம்.





உ

சிவமயம்.

# ஒழிவிலொடுக்கம்.

## காப்பு.



(விநாயகர்தோத்திரம்.)

நிம்பநிழற்பா-லும்பன்முகத்தார் .... ... *
செம்பதுமத்தா-ணம்புகருத்தே........*



(சுப்பிரமணியர்தோத்திரம்.)

ஒழிவிலொடுக்கத்துரைவரநாயேற்குச்.........*
செழிவிலொடுங்கருணைசேர்க்கு-முழுதின்பப் *
பண்டைவளநாட்டும்பரமகுருப்போரூரன் ... ...*
றண்டைவளநாட்டுதிருத்தாள்... ................*



(திருஞானசம்பந்தசுவாமிகள்தோத்திரம்.)

வள்ளலுரைத்தவழிவிலொழிவில்லொடுக்கத்.....*
தெள்ளுமுரையெல்லாந்தெரிவிக்கு-முள்ளமே
யெம்பந்தநீக்குமிறைவன்றமிழ்க்காழிச்,... ... ...*
சம்பந்தன்பூஞ்சதங்கைத்தாள்.....................*

ஆனைமுகனாறுமுகனம்பிகைபொன்னம்பலவன்... ..*
ஞானகுருவாணியையுண்ணுடு...... ... ... ...,...*

---

"உள்ளவுரைநாயேற் குறச்செய்யும்,, என்று பாடமோத லுமுண்டு. *

கண்டு - இத்தோத்திரச் செய்யுட்கள் உரையாசிரியரால் இந்நூற்கு உரை இனிதுமுடிதற்பொருட்டு இயற்றப்பட்டன.



கூடினமையால் வெற்பென்று மஃறிணையை யுயர்திணையாகக்கூறப்பட்டது— "கை,, என்பதை மூன்றிடத்துங்கூட்டுக.— (கைவாரங்கொள்ளுதல்) கூத்தை நிறுத்தற்பொருட்டு ஒகோவென்று மடுக்குமொழிகூறிக் கரமுயர வெடுத்துவீசுதல்.

"களாசம்,, என்பது-பிரம்பு.--பிரம்போடும் வீசுமெனக்கூட்டுக.—

இத்திருவெண்பா - குருதோத்திரம். (௧)



தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பான்சற்குருவா...*
மன்னுபெருஞ்சீயமதயானை-தன்னடைமேற் ....-...*
சொற்பநத்தேதோன்றித்துடிப்பற்றுக்கேவலமாய் .... *
நிற்பதும்போற்பாரானெனின் ... ... .... ... ... .... *

தன்னிழப்பை யென்னகற்றுச் சாதிப்பான்—எ-து- ஒருவன் றற்போத வொழிவைச்சாத்திரங்களைக் கற்றவற்றுட்கூறியவாறே தனது போதத்தா னிட்டைகூடி யெங்ஙனஞ் சாதித்தடைவான்.

சற்குருவா மன்னுபெருஞ் சீயமதயானைதன்னடைமேற்சொற்பநத்தேதோன்றி—எ-து- ஞானசாரியனாகிய வருணிலைபெற்ற பெரியசிங்கம்போல்வான்- சீடனாகிய மதயானையினது மேலாம் பக்குவத்தாற் பிரபஞ்சமாகியசொற்பநத்தின்கட்டோன்றி.

துடிப்பற்றுக்கேவலமாய் நிற்பதும்போல்—எ-து-மதம்பொழியாநின்ற யானையினது சொற்பநத்தின்கட்சிங்கந்தோன்றவதனது மதகெர்விதமியாவுங்கெட்டு மருட்கேவலப்பட்டு நின்றாற்போலச் சீடனாகிய யானையின துட்புறனாய்ச் சீவியாநின்ற போதப்பதைப்பெல்லாமற்று அருட்கேவலமாய் நிற்கும்படி.

பாரானெனின்—எ-து- அப்போதத்திற்கு முட்புறனாகியகிருபாநோக்கஞ் செய்யானாயின்—என்றவாறு.

போதவொழிவின்கண் மெய்ப்பொருளிருத்தலின் மெய்ப்பொருளைத் "தன்னிழப்பு,, என்றார்.

மெய்ப்போதத்தாற் பொய்ப்போத மழிவதன்றி இதனையிதனாலழிக்கத் துடங்கின் மேன்மேல் வளர்ச்சியா யழிவுகூடாமையில "தன்னிழப்பையென்னகற்றுச்சாதிப்பான்,, என்றார்.

யானையைச் சிங்கங்கொல்வதுபோல ஞானத்தா லஞ்ஞானத்தைக் கெடுத்தலிற் "சற்குருவாமன்னுபெருஞ்சீயம்,, என்றும்

ஞர்-குரு-ஞாத-ஞேயமாய- விவைகளொன்றுந்தோன்றாது ஆன்மாவப்பார்வையாற் சிவத்தி லதீதப்படுதலில் "கேவலமாய்நிற்பதுபோற் பாரானெனின்,, என்றுங் — கூறினர்.

"குருவாஞ் சீயம்,, என்றமையாற் (சீடனுமியானை) என்று வருவிக்கப்பட்டது, "அடிப்பற்றுக் கேவலமாய்நிற்பதுபோல்,, என்றுவமையாகக் கூறினமையா லீண்டு மியானையுஞ் சிங்கமும் வருவிக்கப்பட்டது.

சிங்கம்போல்வான் பாரானாயி னெங்ஙனஞ் சாதிப்பானெனமுடிக்க

நடை-பக்குவம்-மேலாயபக்குவம்-எனமாறுக.

சீயம்பாரானெனி னெனமுடிந்தது- இராசசிங்கம் வந்தானென்பதுபோலக்கொள்க.

இத்திருவெண்பாவா லதிதீவிர பக்குவர்க்காயினும் ஞாநாசாரியராலன்றிப் போதநாசங் கூடாதேன்றுகூறியவாறுகாண்க



கூலித்தொழிலாளர்கொண்டுவிற்போர்போன்றகுரு *
வேலைப்பகடிகளைமேவாதே-காலம்போற்.........*
பார்த்திருக்கவைத்தபரமகுருவைப்பாரவ... ...,... ...*
வார்த்தையிலைதீண்டாமநம்... ... ... ... ......*

கூலித்தொழிலாளர் கொண்டுவிற்போர்போன்றகுரு வேலைப்பகடிகளைமேவாதே—எ-து- வேலைசெய்து கூலிவாங்கிக்கொள்ளுங் கூலித்தொழிலாளரையும் - ஓர் பொருளைக்கொண்டோர் பொருளைவிற்கும் வணிகரையும்போன்று- பிறர்க்குக் கிரியைகளைச்செய்து காட்டியும்-உபதேசங்களைக்கூறியும் - அவர்கையிலிருத்தம் பறிக்குந்- தமக்கியையாத குருவென்னும் பெயர்கொண்ட தொழிற்செய்யும் பகடிக்கூத்தாடிகளை மாணுநீமெய்க்குருவென்றடையாதே.

காலம்போற் பார்த்திருக்க வைத்த பரமகுருவைப்பரவ வார்த்தையிலதீண்டாமநம்.—எ-து - கதிர்வலம்வருதலாற் - கணம்-நாழிகை- நாண்- மாதம்- இருது-வருடம்-யுகம்- முதலிய காலங்களுமக்காலங்கடோறுந் தோன்றும் பிரபஞ்சங்களுமநந்தபேதமாய்த் திரியவுந் தனக்கோர் திரிவின்றி யவற்றோடுந் தாக்கற்றிருந்த காலதத்துவம்போல மாயையிற்றோற்றிய கருவிகளுமித்

கருவிகளாற் காரியப்பட்ட பிரபஞ்சங்களு மநந்தபேதமாய்த்தி ரியவுந் தனக்கோர்திரிவின்றி யிவற்றேடுந் தாக்கற்றிருந்த வரு ளேவடிவாகக் கிருபாநோக்கம்வைத்து மாணுக்கனைச் சுட்டற்றி ருக்கவைத்தமேலாகியஞாநாசாரியனைத்தோத்திரம்பண்ணவோ ர்வசனமுமில்லை தியானிக்கவெனின் மனமு மவனைத் தீண்டாது ஆகலின் அக்குருவை யடைதி—எ-று.

கதிர்வலம் வருதலாற் கணமுதலிய காலபேதங்களும் பிர பஞ்சபேதங்களு நானாவாய்த்தோற்றினு மவைக டோற்றற்கும் அதுவலம்வருதற்குங் காலதத்துவம் ஏதுவானாற்போல மாயை யிற் கருவிகளும் பிரபஞ்சங்களு நாநாவாய்த்தோற்றினு மிவை தொழிற்படுதற்கு மிவை மாயையிற் றேற்றுதற்குந்திருவருளே துவாயிற்றென்பதுங்காண்க.

பரமகுரு-சுக்குமைவாக்குந் தற்போதமுங்கடந்த சிவமெ ன்றறிவிக்கவேண்டி "வார்த்தையிலைதீண்டாமநம்,, என்றார்.

இத்திருவெண்பாவா லாசாரியனையு மதாசாரியனையு மா ணுக்கனுக்கறிவித்தவாறு காண்க. (௧)

—••❁••—

குட்டித்திரட்கரடியாறேழுகக்கோன்குதித்துக்.......*
கட்டிப்புதைந்தகதையாகுந்- துட்டமலப் ... ... *
பித்திலேழுத்தவர்கள்பேய்பிதற்றும்பேதையர்க்குப ...*
புத்திபோற்காட்டும்பொருள்... ... ... ... ... ... ...*

குட்டித்திரட்கரடியாறேழுகக்கோன் குதித்துக்கட்டிப்பு தைந்தகதையாகும்—எ-து-பலகுட்டிகளோடுங்கரடியானதுநதி வெள்ளத்தோடுஞ்செல்ல வதனது கரைக்கணின்ற வோரிடைய னதனை யாடெனககருதி யந்நீரிற்குதித் ததனைப்பற்ற வஃதிவனை ப்பற்ற வஃது மிவனு மவ்வெள்ளத் தாழ்ந்தனனென் றுலகத்தார் கூறுங்கதைபோலவாகும்.

துட்டமலப்பித்திலே மூத்தவர்கள் பேய்பிதற்றும் பேதை யர்க்குப்புத்திபோற் காட்டும் பொருள்—எ-து-கொடிதாகியமூ ய்மலப் பைத்தியத்தான் முதிர்ந்த வாசாரிய ரல்லாமோர்காற் கூறிய தோர்காற்கூறாது பேய்பிடித்தாற் போலும் பிதற்றுநின் றவபக்குவர்க் குபதேசம்போலுங் கூறிய வருத்தம்.

பரஞாநமென்பது சிறிதுமில்லாதா ரபரஞாநங்களைக்கற் றுக்கொண்டு மனைவிமுதலிய குடும்பவெள்ளத்தி லாழ்ந்துகிடக்

இன்றபேர்சிலர்-டம்பநிமித்தங் கேழ்க்கவவர்க் கருத்த நிமித்த முபதேசிக்க அந்தவுபதேசப்பொருளா லிருவருக்குந் தோட மேலிட்டுப் பிறவிச்சாகரத்தாழ்வர் ஆகலி னிக்கதையை இப்பொ ருளுக் குவமையாகக் கூறினர்.

இடையன் காடியை ஆடென்றுங் காடி யவனை நதிகடத்து ம்டிணையென்றுங் கருதினதுபோல-வபக்குவனைப் பக்குவனென் று மநாசாரியனை யாசாரியனென்று மிருவரு மாறுபாடாய்க்க ருதினரென்பதுமாம்.

இத்திருவெண்பாவா லநாசாரியனுக்கு மவனிடத்துபதேச ங்கேட்ட வபக்குவனுக்குங் குற்றம்வருமென் றறிவித்தவாறு கா ண்க. (௪)



குருட்டரிப்பனுர்க்குங்குபேரனென்றுபேரோ.*
கருப்பிரதமோத்தையோகாட்டு-மருட்டரித்த*
வாசானைப்போல்வரோவாருறுக்கப்புறத்தே......*
பேசாதிருத்தவல்லாப்பேர்... ... ... ... ... ...*

குருட்டரிப்பனுர்க்குங்குபேரனென்றுபேரோ - கருப்பிரத மோத்தையோகாட்டும்---எ-து-பிறவியந்தகனுகிய வரிப்பாள னுக்குங் குபேரனென்று பெயருண்டுகொலோ- கரும்பினிரத த்தை மோத்தையாடறிந்துகூறுமோ—அவைபோலும்.

அருட்டரித்த வாசானைப்போல் வரோவாருறுக் கப்புறத் தே பேசாதிருத்தவல்லாப்பேர்.—எ-து-அருள்வடிவமல்லாதமா யாவடிவங்கொண்ட வநாசாரியரானுர்- முப்பத்தாறு தத்துவங்க ளையுங் கடந்துநின்ற சிவத்தோடு மாணுக்கனை யிரண்டறக் கலப் பித்து மவுநமாய்வைக்க அருளே திருமேநியாகக்கொண்டெழு ந்தருளிவந்த ஞானசாரியலாப்போலு மாவாரோ.—எ-று.

குருட்டரிப்பனுக்குக் கைப்பரிசமேயன்றிக் கட்பார்வை யின்மையாற் பொற்பொடியேதோன்ற தங்ஙனமிருப்பவனை யுஞ் செல்வத்தா னளகேசனென்று கூறக்கூடுமோ—வதுபோல் அநுசாரியருக்குக் கிரியைத்தொழிலன்றி ஞானமேயில்லை. யங்ங னமிருப்ப வவனாயுங் குருவென்ற கூறப்படுமோ—என்றும்— மோத்தையாடு கொழுந்தாடை தின்பதேயன்றிக் கருப்புதின்ன வறியா தாகலி னதனிரதத்தை யறிந்திங்ஙனமென்று தனதகு ட்டிக்குக்காட்டவறியுமோ—வதுபோல-அநுசாரியர் ஆகமங்கள்

கூறு மந்திரகலை - தந்திரகலை- உபதேசகலைகளுள்.உபதேசகலை யைவிட் டிருவகைக்கலைகளை யாராய்ந் தவற்றுட்கூறிய சரிதாதி களைச்செய் தவற்றான்வரும்விடையாநந்தா நுபவம்பெறுவதேய ன்றிச் சிவாநந்தானுபவ மணுவளவேனு மறியார்- அங்ஙன மிரு ப்பப்பிறர்க்கச்சிவாநந்தா நுபவ மெங்ஙனங் கூறுவார்—என்றும் இந்தவுவமைகளா லறிவித்தவாறு காண்க.

அஃதன்றியும் ஆடேடாகாட்டும் என்னுமெதிர்மறை ஓகாரம் அவ்வாட்டைமறுத் தியானையைக் காட்டிநின்றதாகலிற் கருப்பந் தோட்டத்தைப்போற் சிவாகமம்- அதனுட்புகுதும் ஆடு யானை போல் இதனுட்புகுதுங் கிரியாகுரு-ஞாநகுரு.

ஆடு கரும்பைவிட் டிலையைத்தின் றதனதுசுவையைத் தா னுமறிந்து தனது குட்டிக்குங் காட்டுதல் போலவும் யானை யிலை யைவிட்டுக் கரும்பைத்தின்ற தனது சுவையைத் தானுமறிந்து தனது கன்றுக்குங் காட்டுதல் போலவுங் கிரியாகுரு - மந்திர -தந்திர- கலைகளை யாராய்ந் தவற்றுட்கூறிய சரிதாதிகளை யநுட் டித் தவற்றான்வரும் விடையாநந்தத்தைத் தானு மநுபவித்துத் தன்னையடைந்த சீடனுக்கு மவ்வுபதேசங்களா லவ்வாநந்தத்தை வருவிப்ப னென்பதும்— ஞானகுரு மந்திர - தந்திர - கலைகளை விட் டுபதேசகலையை யாராய்ந் ததனுட்கூறிய ஞாநாநந்தத்தை த்தானும்பெற்றுத் தன்னையடைந்த பக்குவனுக்கு மந்தஞாநாந ந்தத்தை வருவிப்பனென்பதுங் காண்க.

(உ-ம்) பிரபுலிங்கலீலை "புறம்புகாண்குவன்புல்லியனீசனை யறிந்தஞாநியகமுறக்காண்பனு - லெறும்பிகாண்குறிவின்கரும் பேகொளுஞ்-செறிந்தவாடிலைதின்பனவென்பவே,,

அசகசாந்தரம் என்னுங் கிரந்தசமாதியும்-அது.—

குருட்டரிப்பனென்பதைக் "குருட்டரிப்பனூர்,, என்றிழி வின்கட் பன்மையாகக் கூறினூர்.

கட்பார்வையின்மைபோன் ஞாநமின்மை— கைப்பரிசம றிதல்போற் கிரியைகளைச்செய்தல்— என்பதுங்காண்க.

இத்திருவெண்பாவா லநாசாரிய ரிலக்கணமு மாசாரியரில க்கணமுங் கூறியவாறுகாண்க. (௫)



தன்னறிவுசாட்சியல்லாற்சாயுச்சியப்பயனைச்.......*
சொன்னமிலைழகெட்டேன்றெலைப்பரோ - முன்னே

நடவாவழியொருவன்சொல்லநடந்து... ... ... ...*
தடுமாறிநொந்தறியாதார் ... ... ... ... ... ... *

தன்னறிவுசாட்சியல்லாற் சாயுச்சியப்பயனைச் சொன்னபிழை கெட்டேன் றெலைப்பரோ—எ-து- சிவாநுபவநன்றாய் விளங்கிற்றென்பதற்கு மஃதின்றென்பதற்குந் தனக்குத் தன்னறிவுதானே சாட்சியாயிருக்கவும் பயனைக்குறித்து மயக்கத்தாலந்தவநுபவந் தனக்குண்டுபோற்காட்டிப் பிறர்க்கு வீடடையு நெறியானவுபதேசப் பொருளைக்கூறிய பாவங்களைக் கெட்டேன்? எந்தக்கால நீக்கிக்கொள்வரோ.

முன்னே- நடவாவழி யொருவன்சொல்ல நடந்து தடுமாறி நொந்தறியாதார்—எ-து- அஃதன்றியுந் தாமுன்செல்லாதவோரூர்க்குப் பின் செல்லுங்கா லவ்வூ ரடையு நெறியாமென் றந்நெறிக்கட்டான் முன் நடவாவொருவனைக்கேட்ப வவனதன்கட் சென்றான்போன்று நெறியல்லா நெறிகூற வீதுண்மையெனக்கருதியந்நெறிகட்சென்று முன்னிருந்தவூரும்பின்னடையுமூருமன்றிநடுவிடைத் தடுமாறி மநமுடல் வருந்தி யறிந்தவரலர்—எ-று.

ஐயன்-காளி- சந்நிதியி லசத்தியங் கூறினார்க்கு மிம்மைக் கண்ணே துன்பம்வருதலிற் பூரணசிவத்தின் சந்நிதியி லசத்தியங்கூறியபாவந் தொலையாதாகலிற் "கெட்டேன்றொலைப்பரோ" என்றும்—வாக்காற் கேட்டறிந்து காயத்தாற் சென்றடையுமூர்க்கு நெறியறியாவொருவ னெறிகூறக்கேட் டதன்கட்சென் றதனான்வருமிட ரநுபவித்தறிந்தவர் மநத்தானுஞ் சென்று கூடுதற்கரிய வீடடையு நெறியைத் தாமறியாதிருந்து மறிந்தார்போன் றுபிறர்க்குக்கூறுர்-ஆகலி னிங்ஙன மூவமை கூறினர்.

செறலின்கட் (டும்) என்னும்பன்மை "தன்" என்னுமொருமையாய்வந்தது.

"அல்லால்" என்பதை மயக்கத்தாலெனக்கொள்க.

"முன்னே" என்பதை யிரண்டிடத்துங் கூட்டுக.

"கெட்டேன்" என்ப திரக்கக் குறிப்பின்கண்வந்த வழக்கச்சொல்.

இத்திருவெண்பாவால் சாத்தியனேயன்றி சாதகன்ஞானோபதேசம் பண்ணுதல் குற்றமென்றறிவித்தவாறுகாண்க. (அ)



பொய்போகப்போகப்பொருந்திப்பொருடாளுஞ் *
சையோகபோகதரங்கத்தி -னையும்........... *
பரிபாகங்கண்டிபதையாமற்பார்க்கும்.................. *
குருவேகாண்ஞானக்குரு ... ... ... ... ... ... ... *

பொய்போகப்போகப்பொருந்தி—எ-து- பொய்யாகியக ருவிகண் முப்பத்தாறு நீங்கநீங்கவே யவைகளைப் பகுத்தறிந்து நீங்கிநின்ற வறிவு தானென்று தன்னை யருளா லுள்ளபடி கண்டு பின்பு அருட்டரிசநம் - பராதரிசனம் - பராயோகம்- என்னு மிவற்றையடைந்து.

பொருடாளுஞ்சையோகம்போக தரங்கத்தி-னையும்- பரிபா கங்கண்டு பதையாமற் பார்க்கும் - குருவேகாண் ஞானக்குரு.— எ-து-மெய்ப்பொருடாளுகிய வநுபவசத்தியிற் றோன்றி மான ந்தபோக சமுத்திரத்தலையி லவன்கரைந்துபோகுந் தீவிரதரப க்குவ மீதென்றுகண்டு மாணுக்கன தும்போத மணுவளவேனும் பதையாதடங்கக் கிருபாநோக்கம்வைக்கு மாசாரியனே ஞானா சாரியனுவான் —எ-று.

சிவகரணம் பராயோகமளவுந்தொடர்தலிற் "பொய்போ கப்போக" வென்றார்.

"சையோகம்" என்றதனுபவசத்தி அது பராயோகத்திற் குஞ்சுகாதீதத்திற்குமிடையேதோன்றுமாநந்தப்பேற்றிற்கிடம்.

"போகதரங்கத்து" என்றமையாற் சமுத்திரம் வருவிக்கப் பட்டது.

"தரங்கம்" ஆநந்தமேலிடல்.

அவ்விடத்தான்மபோதங்கெடுமாகலின் "னையும்"என்றார்

அடிதொடங்கி யநுபவமுற்றுங் கூறினமையா லிவ்வநுபவ முற்றும் பெறுமவ னதிதீவிர பக்குவ னென்பதுங்காண்க.

இத்திருவெண்பாவால் ஞானாசாரியராயினும் பக்குவரா யறிந்து போதியாராயி னவரையுமாசாரிய ரலரென்றுங் கூறிய வாறுகாண்க. (எ)



தேனுண்டுமிழுந்திறம்போற்சிவாநந்த ... ... ... *
மோநந்துளும்பிமொழிகாலத்-தேநின்று.......*

தோன்றிருதுபோலுமொன்றைச்சுட்டாதுகேட்பவர்கட் *
கான்றதவம்வேதமது... ... ... ... ... ... .. ... *

தேனுண்டுமிழுந்திறம்போற்சிவாநந்த - மோநந்துளும்பி மொழிகாலத்தே—எ-து-தேனை நிறையவுண்டதனை மீட்டுங் கக்குந்தன்மைபோ லுட்புறனு மெங்குநிறைந்து மவுநமா யிருந்த சிவாநந்தவெள்ளங் காருண்ணியத்தாற் றதும்பி ஞாநாசாரியரு பதேசமொழிகளைக் கூறுங்காலத்தளவும்.

நின்று - தோன்றிருது போலுமொன்றைச் சுட்டாதுகே ட்பவர்கட்.கான்றதவம்வேதமது—எ-து- பணிவிடை செய்துநி ன்றுதோன்றப்பட்ட விருதுகாலம்போலு மதுவிதுவென் றொ ன்றையுஞ் சுட்டாது பதைப்பறவிருந் ததனைக் கேட்பவர்களுக் குமாட்சிமைப்பட்ட தவமுடிவும்வேதமுடிவு மங்ஙனநின்றுங்கே ட்குங் கேள்வியாம்—எ-று.

ஆசாரியர் மாணுக்கனது பக்குவமறிந்து வலியக்கூறுத லேயன்றி யவனாயு மிவன் வலியக் கேட்கலாகாதாகலின் "மோ நந்துளும்பிமொழிகாலத்தே,, என்றும்—இருதுவிற்பத்திரபுட் பபலாதிகள்தோற்றினு மவ்விருது விகாரமின்றியிருந்தாற்போற் கருவிகளோடுங் கூடியிருந்து மவற்றுட் டாக்கற்றுநின்று கேட் கவேண்டுமாகலின் "இருதுபோலுஞ் சுட்டாது கேட்பவர்கள்,, என்றுங் கூறினார்.

மோநந்துளும்பி மொழிகாலத்தென்றமையானும்—ஒன் றைச்சுட்டாது கேட்பவர்களென்றமையானுஞ்— சொல்லாமற் சொன்னதென்றுங் கேளாமற் கேட்டதென்றுமாயிற்று.

சுட்டற நிற்கவந்தது தவப்பயனாகலி னதனைத் "தவம்,, எ ன்றும்—அங்ஙன நின்றுகேட்கு மொழியாகலி னதனை "வேத ம்,, என்றும்—கூறினார்.

அங்ஙனஞ் சொல்லுவது மிங்ஙனங் கேட்பதுஞ் சாம்பிர தாயம்.

இத்திருவெண்பாவா லாசாரிய னுபதேசங் கூறுமாறு மா ணுக்க னேற்றுக்கொள்ளுமாறு மறிவித்தவாறுகாண்க. (அ)

---

இருளிற்சுடரொன்னவிந்திரவியென்ன... ... ... *
வருளைக்கடந்தபராநந்தர் -திருவாக்... ... *

கமுதமழையம்பரச்சொன்னன்னிமித்தமாங்கே...*
மமதையிராதென்றேமதி... ... ... ... ... ...*

இருளிற்சுடரொன்ன விந்திரவியென்ன-வருளைக்கடந்தபராநந்தர்-திருவாக்கு—எ-து-பூதவிருளின்கட்டோற்றும்விளக்குப்போலுஞ் சந்திரன்போலுஞ் சூரியன்போலும் பிரகாசித் தாணவ விருளைநீக்குந் திருவருளையுங்கடந்துசிவாநந்தமயமா யெங்குநிறைந்துள்ள ஞாநாசாரியரது அழகியவசநம்.

அமுதமழையம்பரச்சொன் னன்னிமித்தமாங்கே மமதையிராதென்றேமதி—எ-து- அமுதமழைபோலு மாகாசவாக்குப்போலு நல்லநிமித்தம்போலுமாமன்றி யதன்கட் சிறிதேனு மகங்காரமுண்டாகாதென் றறிதி—எ-று.

அருடோற்றுங்கான் மூவிதமாய்த் தோற்றலானு மொன்றற்கொன் றதிகமாய்ப் பிரகாசிக்கையானும் விளக்காதி மூச்சுடரையு முவமையாகக் கூறினார்.

(உ-ம்) தத்துவப்பிரகாசம் — "பொறிகரணங்களையுயிர்ப்போற்போதம்போதத்தைப் - பொருந்திநடத்திடுஞ்செயலாற்போதவுணர்வுணர்ந்தே- யறிவினதுசெயலோநாமெனவுணர்வுற்றிருப்ப வப்போதுவிளக்கெனவுமருணன்மதியெனவுங்-கறைவிடியுங்காலமெனவொளிவந்துற்பவிக்கும்,,— என்பதனானுங்காண்க,

நீர்மழை கைமாறின்றிப் பொழியினு மூற்பத்திநாச முளவாகலி னம்மழையை யுவமைகூறாமல் 'அமுதமழை, என்றும்-ஆகாசவாக் குண்மையறிவித்தல்போ லுண்மையாகிய சிவத்தை யறிவித்தலின் 'அம்பரச்சொல், என்றும்— நல்லநிமித்தங்கேட்டோர்க்குத் தாங்கருதியபொருள் கைகூடல்போ லிதனைக்கேட்டோர்க்குத் தாங்கருதியவீடு கைகூடுதலின் 'நன்னிமித்தம், என்றுங்—கூறினார்.

தற்போதத்தாற்கூறுஞ் சொற்கட்கெல்லா மமதை யிருத்தலின் 'ஆங்கேமமதையிராது, என்றார். (கூ)



சாயாபுருடனைப்போலாநந்தமேதடித்த... ...*
மாயாவயிரிமநமாண்ட -நேயவுரை ... ...*
பாவேசர்விரரசர்மடலாளர்... ... ... ... ... *
சாவானந்தர்க்குச்சரி... ... ... ... ... ... ...*

சாயாபுருடனைப்போலாநந்தமேதடித்த மாயாவயிரிமனமா ண்ட-நேயவுரை--எ-து-வடிவமின்றிய வாகாயத்தில்வடிவம்போ ற்றடித்த சாயாபுருடனைப்போல் வடிவமின்றிய பேராநந்தற் றானே காருண்ணியத்தால் வடிவம்போற்காட்டி யெழுந்தருளி வந்த (மாயைக்கோர்வயிரியரான) ஞானசாரியரது மனோதீதமா ன கிருபாவசனம்.

ஆவேசர் வீரரரசர் மடலாளர் சாவானந்தர்க்குச்சரி —எ-து- ஆவேசமேறினர் மாவீரராயினர் ஒருகுடைக்கீழாளுமரச ர் மடலெடுத்தவர் தாஞ்சாவதின்பமாய்க்கருதினோர் ஆகிய விவர் களது மொழிகட்குச்சரியாம்—எ-று.

ஆவேசமேறினர் - தற்செயலின்றிக் கூறுதல்போல மூக்க ணங்களையுந் தமதிடத்தடக்கிக்கொண்டருளாய்நின்று கூறின மையானும்—மாவீரராயினோர்- எதிர்த்தாரைக்கொல்வதே கரு த்தாகக்கூறுதல்போ லறிவுக் கெதிரீடாய்த் தோற்றுவனவெல்லா மதனாற் கொல்வதே கருத்தாகக்கூறுதலானும்—ஓர்குடைக்கீழா ளுமரசர்- கூறியமொழிப்படி யிம்மைப்பயனுகுதல்போ லிவர் கூறியமொழிப்படி மறுமைப்பயனுகுதலானும்—மடலாளர்-ம ற்றொன்றையுங்கூறாது தாம்நச்சியமாதினையே புகழ்ந்து கூறுத ல்போலச் சரிதாதிகளைக் கூறாது தமது ஞானநந்தத்தையே பு கழ்ந்து கூறுதலானும்—சாவானந்தர்- தாஞ்சாவதே யின்பமாக க்கூறுதல்போலத் தற்போதவொழிவையே யின்பமாகக் கூறுத லானும்—ஆவேசமேறினர் முதலிய வைவர் மொழியையு முவ மையாகக் கூறினர்.

அவரது மொழிக் குவமை கூறினமையா லிவரது மொழி வருவிக்கப்பட்டது.

இவ்விரண்டு திருவெண்பாவானும் ஞானசாரியரது திரு வாக்குச்சிறப்புக் கூறியவாறுகாண்க. (௰)

---

சத்தியநிர்வாணத்தாற்றற்போதத்தாக்கறுத்து....*
வைத்துவழிகாட்டுமறைப்புலவன் - சுத்தன் ..*
றமிழ்க்குரிசிற்சீகாழிச்சம்பந்தனென்பா... .....*
னெமக்கருளிச்செய்ததிது... ... ... ... ... ...*

சத்தியநிர்வாணத்தாற் றற்போதத் தாக்கறுத்து வைத்துவழி காட்டும்—எ-து- சத்தியநிர்வாணத் தீக்கையாலெனது போத

தீதை யொன்றேனும் பற்ற தொழித்துச்சிவத்தோ டிரண்டறக் கலக்கவைத் தென்பால் வந்தடைந்தோர்க்கு மெனதுள்ளே தா மே நிறைந்திருந்து முத்திநெறியை யறிவிக்கும்.

மறைப்புலவன் - சுத்தன் - தமிழ்க்குரிசிற் சீகாழிச்சம் பந் தனென்பா னெமக்கருளிச்செய்ததிது.—எ-து - வேதங்களையெ ல்லா மோதாமலுணர்ந்த ஞானப்புலவர் - மும்மலங்களையுங்கடந் துநின்ற நின்மலர் - தமிழின திலக்கணமெல்லா மளவிட்டறிந்த தமிழ்வேந்தர்- சீகாழியென்னுந் திருப்பதியி லெழுந்தருளியிரு ந்த திருஞானசம்பந்தப்பிள்ளையாரென்றியாவரும் புகழாநின்ற சுவாமிகள்- எம்போல்வார் வீடடைந் துய்யுநிமித்த மருளிச்செ ய்ததிந்நூலினருத்தம்—எ-று.

இந்நூல்பிறர்க் குபகாரமாகக்கூறினமையால்"வழிகாட்டும்" என்பது பிறர்க்கெனக்கொள்க.

"மறைப்புலவன்", 'தமிழ்க்குரிசில்' என்றமையா லுபயக லைகளையு முடையானென்றறிக.

இத்திருவெண்பாவா லுன்மரபு கூறியவாறுகாண்க. (யக)

---

தாக்கற்றபூரணத்திற்சந்தற்றதம்மைமல... ....*
நீக்குந்துயரகலநேசித்தோர் - பார்க்கும் ..*
வழிபலநாம்பைமறித்தவாறுநீமாளா ... ... ... *
வொழிவிலொடுக்கமுனாப்போம்... ... ... ... .*

தாக்கற்றபூரணத்திற்சந்தற்றதம்மைமல-நீக்குந்துயரகல்நே சித்தோர்—எ-து- எல்லாவற்றொடுங்கூடிநின்று மலைக ளொன் றேனுந் தாக்கற்றிருந்த பரிபூரண சிவத்தோடு ஆணவ நீங்கியவி டத் திரண்டறக்கலந்து விளங்காநின்ற தம்மை யந்த வைக்கியத் தைத் தெரியவொட்டாது மறைத் திரண்டுபடுக்கு மவ்வாணவம லதுன்ப மகன்றேக வன்புகொண்டோர்.

பார்க்கும்- வழிபல நாம் பைமறித்தவாறுநீ மாளாவொழிவி லொடுக்கமுரைப்போம்—எ-து- ஆராய்ந்தறியுஞ் சாத்திரநெறி கள் பற்பலவுளவா மவைபோலும் மறைத்துக்கூறாது நாம்பை யைவிரித் ததனுளிருந்த பொருளீதென்று காட்டுமாறுமானுக் கனே யொழியாம னீயறுதியென வொழியுமிடத் தொடுங்கு நெறியைக் கூறுவாம்.—எ-று.

ஆன்மாவிற்குச் சிவத்தோடைக்கிய மலமறைப்பாற் றெளி பாதிருத்தலின் "நீக்குந்துயாகலநேசித்தோர்,, என்றார்.

"பார்க்கும்வழிபல,, வென்றது பேதம் அபேதம் பேதா பேதங்களாய்க் கூறுநெறிகள்.

அநுபவ ரகசிய மெல்லாமறையாமற் கூறினமையாற்'பை மறித்தவாறு, என்றார்.

ஆன்மா கெடாததனது போதங்கெடுதலின்'மாளாவொழி வில், என்றார்.

அவ்விடஞ்சுகாதீதம். அதனுளொடுங்குநெறி யிதனுட்கூறி னமையால்'ஒழிவிலொடுக்கமுறைப்பேபாம், என்றார்.

இத்திருவெண்பாவா னூற்பயன் கூறியவாறுகாண்க. (௰உ)

---

சுருதிகுருவாக்குச்சுவாநுபவமூன்றுஞ்... ... *
சரியொத்தபோதமுனைச்சார்வைத் - தெரிய...*
வுரைத்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம்... ... *
விரித்தநூற்கெல்லாம்விதை .. ... .. ... ... *

சுருதிகுருவாக்குச் சுவானுபவமூன்றுஞ் சரியொத்தபோ தமுனைச்சார்வை—எ-து- ஞானசாரிய ரருளிச்செய்த வுபதேச மொழிகளு மிம்மொழிகண்மேலையம்பிறவா திவற்றைத் தெளி விக்கும்வேதாகமங்களு மிவ்விருவகைமொழிகளி னருத்தப்படி யே தம்முட்டோன்றுஞ் சுவாநுபவமுமாகிய மூவகையுஞ் சரி யொத்த விடத்திற் றோன்றும் பேரறிவாகிய பதியையு மவற்று னிப்பதியை யறியும் பசுவையு மிப்பதியைப் பசுவிற் கறியவொ ட்டாது மறைத்து நின்ற பாசத்தையும்.

தெரிய-வுரைத்தநூற்பேர்கேளொழிவிலொடுக்கம்-விரித்த நூற்கெல்லாம்விதை---எ-து- உள்ளபடி விளங்கக்கூறிய விந்நூ ற்பெயரை மாணுக்கனே நீகேட்டி ஒழிவிலொடுக்கம்.என்பதாம் இம்முப்பொருளையும் பற்பலவாய்விரித்துக் கூறிய நூல்கட்கெ ல்லா மிஃதோர்வித்தாம்---எ-று.

குருமொழியே யமையுமெனினுந் தீவிரதர பக்குவ மின் றிய மற்றைய ருவர்க்கு மதன்மேலையம் பிறக்கு மாகலின் சுருதிவேண்டிற்று- குருவுஞ் சுருதியுமுண்டாய் சுவாநுபவமின் றாயினது பரஞான மன்று-ஆகலி னிம்மூன்றுஞ் "சரியொத்த போதம்,, என்றார்.

இக்குறிப்பா லிந்நூலு மிம்மூன்று மொத்துக் கூறியதெ ன்பதாயிற்று.

முப்பொருளின திலக்கண விரிவையெல்லாஞ் சுருக்கித்தற் போதவொழிவிற் குபாயமே விரித்துக் கூறலானும் — போத வொழிவி லியாவுமொடுக்கிப் போதவிரிவிலியாவும்விரித்தலானு மிதனை 'விரித்தநூற்கெல்லாம்விதை, என்றார்.

இத்திருவெண்பாவா னூற்பெயர் கூறியவாறுகாண்க. (௰௩)

---

தந்திரகலைமந்திரகலைசார்பழுந்தச்சாற்றுமது ...*
மந்திரசரிதாதிமார்க்கமிது - முந்தைத்... ... *
தபதிவிரத்தியரைச்சார்பழியச்சாற்று... .. ... *
முபதேசமென்றேயுணர்... ... ... ... ... ... *

தந்திரகலைமந்திரகலைசார்பழுந்தச்சாற்றுமது-மந்திரசரிதாதி மார்க்கம்—எ-து- குண்ட மண்டல வேதிகாதிகளைக்கூறுந் தந்தி ரகலைகளுங்- கிரியைகட் குரியவாகிய மந்திரங்களைக்கூறு மந்திர கலைகளும்- ஆன்மாவை மேன்மேலு மலச்சார்போ டழுந்தக்கூ று மக்கலைகண் மந்திர தந்திர கிரியாபாவனைகளாற்செய்யுஞ் சரி தை கிரியா யோகநெறிகளாகும்.

இது முந்தைத்-தபதிவிரத்தியரைச் சார்பழியச்சாற்று முப தேசமென்றேயுணர்—எ-து-இந்நூன் முற்பவங்களி னிட்காமிய த்தவம் பண்ணின தபோதனர்க்கு மத்தவத்தா னுட்பற்றறுதியு டையோர்க்கு மலச்சார்பறும்படி கூறு ஞானோபதேசமென்று நீயறிதி—எ-று.

அக்கலைகளாற் போதவிரிவேயன்றி யொழிவின்மையாற் 'சா ர்பழுந்தச்சாற்றும், என்றார்.

இது 'தபதிவிரத்தியரைச் சார்பழியச் சாற்றும், என்றமை யான் மற்றையர்க் காகாதென்பதாயிற்று.

இத்திருவெண்பாவா லிந்நூ லுபதேசகலையென் றறிவித்த வாறுகாண்க. (௰௪)

---

உடற்குயிர்போற்கட்கிமைபோலூசிநூலொத்து.....*
விடிற்புலிதீபாம்பினில்வீழ்வார்க்காஞ்-சுடச்சுடினும்
வாழைக்காகாவேதிமட்கலத்துக்காகாவா... ... ... ... *
றேழைக்காகாதிது ..... ... ... ... ... ... ... ... *

# பொதுவிலுபதேசம்.

உடற்குயிர்போற்கட்கிமைபோ லாசிறாலொத்துவிடிற்-பு லிதீபாம்பினில்வீழ்வார்க்காம்—எ-து- உடம்பை யுயி ரபிமானி த்தல் போலுங் கண்ணை யிமையானது காத்தல்போலு மாசி செ ன்றவிடந்தோ றுஞ் சரடு பின்சேறல்போலு ஞானு சாரியனை ப்பிரியாது நின்றவர் திருமேனியை யபிமானித்தும் பாதுகாத் து மவர் திருவுள்ளக் குறிப்பின்படியே சென்றும் வழிபட்டு அ வர்பார்த்துப் புலி-தீ-பாம்பாதிகளிற் செலுத்தினும்பின்னிடை யா தலைமேல் விழு மதிபக்குவர்க்கே யிந்நூல்கொடுக்கலாகும்.

சுடச்சுடினும் - வாழைக்காகாவேதி மட்கலத்துக் காகாவா றேழைக்காகாததிது—எ-து- மிகுந்த வக்கினியாற் சுடினும் வா ழைத்தண்டைச் சுடக்கூடாதவாறுபோலும் பரிசனவேதி மட்க லத்திற் பரிசித்துப் பொன்னாக்கக்கூடாத வாறுபோலும் - அங் ஙனமாசாரியனை வழிபடமாட்டாத வபக்குவர்க்கிந்நூல்கொடு ப்பினு மநுபவஞ் சித்தியாது—எ-று-

உயிரானது உடம்பைத் தானு யபிமானித்துத் துன்பந்து டைத்த லொப்பனைசெய்தன் முதலிய வுபசாரங்களை யதற்குச் செய்வதுபோலு மவர் திருமேனியைத் தந்தேகமா யபிமானித் துச் செய்யவேண்டு முபசாரமெல்லாஞ் செய்யவேண்டு மாகலி ன் 'உடற்குயிர்போல, என்றும்— இமையானது கண்ணைவிட்டு நீங்காதிருந் ததன்கட் டுரும் பாதிவந்து சார்வதற்கு முன்னே நின்று பாது காத்தல்போலு மிரவும் பகலும் விட்டுநீங்கா திருந் தவரைத் துட்ட மிருகமுதலிய வந்து சார்வதற்கு முன்னே நின் று பாதுகாக்க வேண்டும்- ஆகலித் 'கட்கிமைபோல, என்றுங்— கூறினர்.

அதிபக்குவர் தேகாபிமானம்விட் டவரை மெய்ப்பொரு ளாகக் கருதினவராகலிற் புலியாதிகண்மேற் செலுத்தினும்வீழ் வா ரென்பதாயிற்று.

அக்கினிக்கும் பரிசன வேதிக்கும் விறகைச் சுடுதற்கும் உ லோகங்களைப் பொன்னாக்குதற்குங் கூடுமேயன்றி வாழைத்தண் டையு மட்கலத்தையு மங்ஙனஞ் செய்யக்கூடா ததுபோ லிந்நூ லாற் பக்குவர்க்கு ஞானம் விளங்குமேயன்றி யபக்குவர்க்கு வி ளங்காதென்ப தறிக.

இத்திருவெண்பாவா லிந்நூற் கதிகாரிகளினிலக்கணமறிவி த்தவாறு காண்க. (௰௫)

